ஸ்ரீ

# மாமுனிகள் உகந்த மங்கையர்கோன்

*ஸ்ரீ. உ. வே., வே. ரா. வரதநாராயணய்யங்கார் ஸ்வாமி*

வீறுடைய கார்த்திகையில் கார்த்திகைநாள் இன்று, என்று காதலிப்பார் வாய்த்த மலர்த்தாள்கள் வாழ்த்தும் ஸ்ரீ மணவாள மாமுனிகள், ஒரு சமயம் தம் அஷ்டதிக்கஜங்களுடன் திருவாலி திருநகரிக்கு திக் விஜயமாக எழுந்தருளி, அர்ச்சாவதராத்தில் எழுந்தருளியிருக்கும் ஆழ்வாரை சேவித்து, அவ்வடிவழகிலே தோற்று அணைத்த வேலும் என்று தொடங்கும் சூர்ணிகையை, (பக்கம் 19, 20 காண்க) அனுசந்தித்து, 'தென்னாலி நாடன் திருவழகைப்போல் என் ஆணை ஒப்பாரில்லையே' என்றும் 'என் கண்ணைவிட்டு அகன்றிடாது கலியன் ஆணை ஆணையே' என்றும் ஆணைகளிட்டு ஒருவாறு தாம் தரித்து நின்ற விஷயம் ஸ்ரீ வைஷ்ணவர்கள் அறிந்ததே.

மேலும், திவ்ய தேச மங்களாசாஸனத்தில் இழிந்த வாறே, மண்ணியாற்றங்கரையில் நின்று, தம் ஆனந்தத்திற்குப் போக்குவீடாய் 'மங்கை நகர் வாழி' தொடங்கி, 'பொங்குபுனல் மண்ணித்துறை வாழி, வாழி பரகாலன் எண்ணில் தமிழ்ப்பா இசை' என்றும், திருவஷ்டாக்ஷரத்திற்கு விளைநிலமான திருமணங்கொல்லையையும் (தற்போது வேதராஜபுரம் என்று வழங்குகிறது), 108 எம்பெருமான்களும் சேவைசாதித்த விடமான, பெருமாளுடைய ஸ்ரீபாத தீர்த்தம் என்று வழங்குகிற திருவரசாற்றின்கரையையும் 'இதுவோ திருவாலி' என்று தொடங்கி, 'எட்டெழுத்தும் பரித்த விட'மென்று கொண்டாடினார்.

எட்டெழுத்தும் அறிந்த இடம் என்று சாதிக்காமல் வாள் வலியால் மந்திரம் கொண்டமை குறித்து எட்டெழுத்தும் பறித்தவிடம் என்று அனுசந்திக்கிறார் தம் விசத வாக்கலே. மேலும், அஷ்டாக்ஷரம் விளைந்த அவ்விடத்திலேயே, ஒரு ஸம்வத்ஸரம், தம்பரிவாரங்களுடன் எழுந்தருளியிருந்து மாறன் பணித்த தமிழ் மறையின் ஆறங்கங்ளாகிற ஆறு பிரபந்தங்களுக்கும் வ்யாக்யான காலக்ஷேபங்கள் சாதித்து உகந்தார் என்று விலக்ஷணர் வழங்குவர். இப்படி மாமுனிகள், மங்கையர்கோனை உகந்த விஷயம் பின்புள்ளாருக்கும் சேவிக்கும்படி, பிரதி வருஷமும், தை அமாவாஸைக்கு மறுதினம், ஆழ்வார் பஞ்ச நிருஸிம்ஹ க்ஷேத்ரங்களையும் திருநாங்கைப் பதினொரு திவ்யதேசங்களையும் சேவித்து, பின்பு நாங்கை எம்பெருமான்கள் ஆழ்வாரை விட்டுப்பிரிய மனமில்லாமல் மணிமாடக்கோயிலில் எழுந்தருள, மறுபடியும் ஆழ்வாருடைய பாசுரங்களைக்கேட்டருளி உகந்து, அவருக்குத் திருப்பரியட்டம் திருமாலை, ஸ்ரீ சடகோபன் சாதித்தருள, இவ்வைபவத்தை சேவிக்க அங்கு எழுந்தருளின ஸ்ரீ மணவாளமாமுனிகள் மிகவும் உகந்து, தாம் அருளிய வடிவழகு சூர்ணிகைகளாலும் ''நந்தாதீப'' என்கிற சுலோகத்தாலும் எம்பெருமான்களையும் ஆழ்வாரையும் சேர்த்து, மங்களாசாஸன வைபவத்திற்கு கண்ணெச்சில் வாராமைக்குத் தாம் பல்லாண்டு பாடுகிறார்.

இவ்வைபவம் பக்தர்களுக்குக் கண்கொள்ளாக்காட்சி யாகும். ஆழ்வார்களில் கடைக்குட்டியும் ஆசாரியர்களில் கடைக்குட்டியும் ஒருங்கே சேருமிடம் அன்றோ!

|| श्रीः ||

श्रीवरवरमुनिभिरनुगृहीता

## || यतिराजविंशतिः ||

மணவாளமாமுனிகள் அருளிச்செய்த

# யதிராஜ விம்சதி

### தனியன்

य: स्तुतिं यतिपतिप्रसादनीं व्याजहार यतिराजविंशतिम् ।
तं प्रपन्नजनचातकाम्बुदं नौमि सौम्यवरयोगिपुङ्गवम् ॥

யஃஸ்துதிம் யதிபதிப்ரஸாதிநீம் வ்யாஜஹார யதிராஜவிம்சதிம் ।
தம் ப்ரபந்நஜநசாதகாம்புதம் நௌமி ஸௌம்யவரயோகி புங்கவம் ॥

யதிராஜனுன எம்பெருமானுர் திருவுள்ளத்தையுகப்பிக்கும்படி யதிராஜவிம்சதி என்னும் ஸ்தோத்ரத்தை அருளிச்செய்தவரும் ப்ரபந்நர்களுக்கு வேறிடம் தேடிப்போகவேண்டாமல் ஸகலார்த்தங்களையும் அருளுபவருமான மணவாளமாமுநிகளைத் துதிக்கிறேன்.



---

श्रीमाधवाङ्घ्रिजलजद्वयनित्यसेवाप्रेमाविलाशयपराङ्कुशपादभक्तम् ।
कामादिदोषहरमात्मपदाश्रितानां रामानुजं यतिपतिं प्रणमामि मूर्ध्ना ॥

ஸ்ரீமாதவாங்க்ரி ஜலஜத்வய நித்யஸேவாப்ரேமா விலாசய ப்ராங்குச பாதபக்தம் ।
காமாதிதோஷ ஹரமாத்மபதாச்ரிதாநாம் ராமாநுஜம் யதிபதிம் ப்ரணமாமிமூர்த்நா ॥

பூமன்னுமாது பொருந்தியமார்பனுன ஸ்ரீயஃபதியின் திருவடிகளில் எப்போதும் தொழுதெழும் மனத்தனுய், அத்திருவடிகளில் கனத்த ப்ரேமையுடையவரான மாறனடி பணிந்துய்ந்த வரும், தமது திருவடிகளைப் பணிபவருக்கு ஸகலதோஷங்களையும் போக்கித்தருபவரும், யதிகளுக்குத் தலைவருமான எம்பெருமானுரைத் தலையால் வணங்குகிறேன். 1

श्रीरङ्गराजचरणाम्बुजराजहंसं श्रीमत्पराङ्कुशपदाम्बुज भृङ्गराजम् ।
श्रीभट्टनाथपरकालमुखाब्जमित्रं श्रीवत्सचिह्नचरणं यतिराजमीडे ॥

ஸ்ரீரங்கராஜ சரணும்புஜராஜஹம்ஸம் ஸ்ரீமத் பராங்குச பதாம்புஜ ப்ருங்கராஜம் ।
ஸ்ரீபட்டநாத பரகால முகாப்ஜமித்ரம் ஸ்ரீவத்ஸசிந்நசரணம் யதிராஜமீடே ॥

ஸ்ரீரங்கநாதனுடைய திருவடித்தாமரைகளில் பொருந்தின ராஜஹம்ஸம் போன்றுள்ளவரும், நம்மாழ்வாருடைய திருவடித்தாமரைகளில் படர்ந்தவண்டு போலிருப்பவரும், பட்டர்பிரான், பரகாலன் முதலான ஆழ்வார்களாகிற தாமரைப்பூக்களை (அவர்களை அடியொற்றி நடப்பதால் களிப்பூட்டி) மலரச்செய்யும் ஸூர்யன்போன்றவரும், ஸ்ரீவத்ஸசிஹ்நர் எனப்படும்

கூரத்தாழ்வான் (முதலான முதலிகளுக்கு) தஞ்சமாயிருப்பவருமான எம்பெருமானரைத் துதிக்கிறேன். 2

वाचा यतीन्द्र ! मनसा वपुषा च युष्मत्पादारविन्दयुगलं भजतां गुरूणाम् ।
कूराधिनाथकुरुकेशमुखाद्यपुंसां पादानुचिन्तनपरस्सततं भवेयम् ॥

வாசா யதீந்த்ர ! மநஸா வபுஷாச யுஷ்மத்பாதாரவிந்தயுகளம் பஜதாம் குரூணும் ।
கூராதிநாத குருகேசமுகாத்யபும்ஸாம் பாதாநுசிந்தநபாரஸ்ஸததம் பவேயம் ॥

யதீந்த்ரரே ! சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினுலும் தேவரீருடைய திருவடித்தாமரைகளையே தொழுபவர்களும், மஹாசார்யர்களுமான கூரத்தாழ்வான், திருக்குருகைப்பிரான் பிள்ளான் முதலான முதலிகளுடைய திருவடிகளையே எப்போதும் சிந்திப்பவனாக இருக்கும்படி தேவரீர் க்ருபைபண்ணவேண்டும். 3

नित्यं यतीन्द्र ! तव दिव्यवपुस्मृतौ मे सक्तं मनोभवतु वाग्गुणकीर्तनेऽसौ ।
कृत्यं च दास्यकरणं तु करद्वयस्य वृत्यन्तरेऽस्तु विमुखं करणत्रयं च ॥

நித்யம் யதீந்த்ர ! தவ திவ்யவபுஸ்ம்ருதௌ மே
ஸக்தம் மநோபவதுவாக் குணகீர்த்தநேஸௌ ।
க்ருத்யம் ச தாஸ்யகரணம் து கரத்வயஸ்ய
வ்ருத்யந்தரேஸ்து விமுகம் கரணத்ரயஞ்ச ॥

எம்பெருமானரே ! அடியேனுடைய நெஞ்சு எப்போதும் தேவரீருடைய திவ்யமங்கள விக்ரஹத்தை த்யானிப்பதிலேயே ஊன்றியிருக்கவேண்டும் ; என் வாக்கு தேவரீருடைய கல்யாண குணங்களைப் புகழ்வதிலேயே ஊன்றவேணும் ; என் கைகளிரண்டும் தேவரீர் கைங்கர்யத்திலேயே ஊன்றியிருக்கவேணும். இப்படி அடியேன் மநோவாக்காயங்களாகிற முக்கரணங்களாலும் இதர வியாபாரங்களை சிறிதும் கவனியாதவனாக இருக்கும்படி அருளவேண்டும். 4

अष्टाक्षराख्य मनुराजपदत्रयार्थनिष्ठां ममात्र वितराद्य यतीन्द्र नाथ ! ।
शिष्टाग्रगण्यजनसेव्य भवत्पदाब्जो हृष्टास्तु नित्यमनुभूय ममास्य बुद्धिः ॥

அஷ்டாக்ஷராக்ய மநுராஜ பதத்ரயார்த்த நிஷ்டாம்
மமாத்ர விதராரத்ய யதீந்த்ரநாத ।
சிஷ்டாக்ரஹண்யஜநஸேவ்யபவத்பதாப்ஜே
ஹ்ருஷ்டாஸ்து நித்யமநுபூய மமாஸ்யபுத்திః ॥

எமது குலநாதனன எமபெருமானரே ! மந்த்ர ராஜனெனக்குலாவப்படும் திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்தின் மூன்று பதங்களான ப்ரணவம், நமஸ்ஸு, நாராயணய இவைகளில் தேறின அர்த்தங்களான அநங்யார்ஹசேஷத்வம் [1], அநங்யபோக்யத்வம் [2], அநங்யசரணத்வம் [3] இவைகளில் திடமானவுறுதியை அடியேனுக்கு இந்தவுலகிலேயே, (ருசிவிளைவித்த) இப்

1. பரமபுருஷனைத்தவிற இதரர்களுக்கு ஸொத்தாக இல்லாதிருக்கை,
2. பரமபுருஷனைத்தவிற இதரர்களுக்கு மகிழ்ச்சிக்குறுப்பான வஸ்துவாக இல்லாதிருக்கை
3. பரமபுருஷனைத்தவிற இதரரிடத்தில் பணியாமை

பகவானுக்குச் சேஷமாயிருக்கை, அவனடியார்களுக்குச் சேஷமா யிருக்கையையும் உட்கொண்டது. எம்பெருமானரைத்தவிற தேவுமற்றறியேன் என்ற நிலையை இங்கு வேண்டுகிருர்.

போதே அருளவேண்டும். மஹான்களில் தலைவர்களான ஆழ்வான் ஆண்டான் போல்வார் தொழும்படியான தேவரீருடைய திருவடித் தாமரைகளை இடைவிடாமல் நித்யாநுபவம் பண்ணி, அவைகள் திறத்தில் நித்யகைங்கர்யம் பண்ணி மகிழும்படி அருள்பாலிக்க வேண்டும்.

5

अल्पाऽपि मे न भवदीयपदाब्जभक्तिश्शब्दादिभोगरुचिरन्वहमेधते हा ।
मत्पापमेव हि निदानमनुष्य नान्यत्तद्वारयार्य यतिराज ! दयैकसिन्धो ! ॥

அல்பாபி மே ந பவதீயபதாப்ஜ பக்தி: சப்தாதிபோகருசிரந்வஹ மேததே ஹா ।
மத்பாபமேவ ஹி நிதாநமமுஷ்ய நாந்யத் தத்வாரயார்ய யதிராஜ ! தயைகஸிந்தோ ! ॥

கருணையேகடலாம் ஆசார்யரான எதிராஜரே! அடியேனுக்குத் தேவரீருடைய திருவடித் தாமரைகளில் சிறிதும் அன்பில்லை. மேலும், மற்ற விஷய போகங்களில் ஊற்றம் தினமும் அதிகமாகிக்கொண்டே போகிறது. இதற்கு மூலகாரணம் என்னுடைய பாபமே. அதைத் தொலைத்தருள வேணும். 6

இந்த 6வது முதல் 15வது ச்லோகம் வரை தாம் மஹாபாபி என்று பலபடியாலும் நைச்யாநுஸந்தானம் பண்ணுகிறார்.

वृत्या पशुर्नरवपुस्त्वहमीदृशोऽपि श्रुत्यादिसिद्धनिखिलात्मगुणाश्रयोऽयम् ।
इत्यादरेण कृतिनोऽपि मिथः प्रवक्तुमद्यापि वञ्चनपरोऽत्र यतीन्द्र ! वर्ते ॥

வ்ருதயா பசுர் நரவபுஸ் த்வஹமீத்ருசோபி ச்ருத்யாதி ஸித்தநிகிலாத்மகுணாச்ரயோயம் ।
இத்யாதரேண க்ருதிநோபி மித : ப்ரவக்தும் அத்யாபி வஞ்ந பரோத்ர யதீநதர ! வர்த்தே ॥

எம்பெருமானாரே! மனித சரீரமுடையேனா யிருந்தாலும் நடைத்தையில் பசுவை (ம்ருகங்களை) யொத்தவன். ஆனாலும், 'இவன் சாஸத்ரங்களில் தேறின ஸகல ஆத்ம குணங்களும் நிறைந்தவன்' என்று அறிவாளிகளும் என்னைப்பற்றி பரஸ்பரம் ஆதரவோடு பேசும்படி வஞ்சகனாக இருக்கின்றேன். 7

दुःखावहोऽहमनिशं तव दुष्टचेष्टश्शब्दादिभोग निरतश्शरणागताख्यः ।
त्वत्पादभक्त इव शिष्टजनौघमध्ये मिथ्याचरामि यतिराज ततोऽस्मि मूर्खः ॥

துஃக்காவஹோஹமநிசம் தவதுஷ்டசேஷ்டச்சப்தாதிபோகநிரதச் சரணாகதாக்ய: ।
த்வத்பாத பக்த இவ சிஷ்ட ஜநௌகமத்யே மித்த்யா சராமி யதிராஜ !
ததோஸ்மி மூர்க்க : ॥

யதிராஜரே ! மிகவும் கெட்ட நடத்தைகளையுடைய நான், சப்தாதி விஷயங்களில் ஊற்ற முடையவனாய், ப்ரபந்நன் என்ற பெயரை வைத்துக்கொண்டு, எப்போழுதும் தேவரீருடைய திருவுள்ளத்தைப் புண்படுத்திக்கொண்டு நல்லோர்கள் நடுவில் திரிகிறேன். 8
இப்படி மூர்க்கனாயிருக்கிறேன்.

नित्यं त्वहं परिभवामि गुरुं च मन्त्रं तद्देवतामपि न किञ्चिदहो बिभेमि ।
इत्थं शठोऽप्यशठवद्भवदीयसङ्घे धृष्टश्चरामि यतिराज ! ततोऽस्मि मूर्खः ॥

நித்யம் த்வஹம் பரிபவாமி குருஞ்ச மந்த்ரம் தத்தேவதாமபி நகிஞ்சிதஹோ பிபேமி ।
இத்தம் சடோப்யசடவத் பவதீயஸங்கே த்ருஷ்டச்சராமி யதிராஜ ! ததோஸ்மி மூர்க்க :॥

எம்பெருமானுரே ! நித்யமும் நான் ஆசார்யரையும், அவருபதேசித்த தேசித்தமந்த்ரத்தையும், மந்த்ரத்துக்குள்ளீடான தேவதையையும் பரிபவப்படுத்துகிறேன். இப்படிப்பட்ட பாபியானு லும், அப்படியல்லாதவன் போல் தேவரீரடியார்திரளில் துணிவுடன் ஸஞ்சரிக்கிறேன். ஆத லால் மூர்க்கனுயிருக்கிறேன். (நான்காம் பாதத்தில் த்ருஷ்ட: என்று இங்கு கொண்டுள்ள பாடத்துக்கு ஹ்ருஷ்ட : என்று வேறு பாடமுண்டு. வஞ்சித்து விட்டோமென்று மகிழ்ச்சி யுடன் திரிகிறேன் என்று பொருளாகுமிதனுல்.) 9

हा हन्त हन्त मनसा क्रियया च वाचा योऽहं चरामि सततं त्रिविधापचारान् ।
सोऽहं तवाप्रियकरः प्रियकृद्वदेवं कालं नयामि यतिराज ! ततोऽस्मि मूर्खः ॥

ஹா ஹந்த ஹந்த ! மநஸா க்ரியயா ச வாசா யோஹம் சராமி ஸததம் த்ரிவிதாபசாரான் ।
ஸோஹம் தவாப்ரியகர : ப்ரியக்ருத்வதேவம் காலம் நயாமி யதிராஜ ! ததோஸ்மி மூர்க்க :

எம்பெருமானுரே ! மனம், மெய், சொல் இப்படிப்பட்ட முக்காரணங்களாலும் எப்போதும் பகவதபசாரம், பாகவதாபசாரம், அஸஹ்யாபசாரம் எனப்பட்ட மூன்றுவகை அபசாரங் களிலும் ஈடுபட்ட நான் தேவரீருக்கு ப்ரியமல்லாததையே செய்துகொண்டு, ப்ரியத்தைச் செய்பவன்போல இப்படியே காலத்தைக் கழிக்கிறேன். ஆதலால் நான் மூர்க்கன். என்ன கொடுமையிது ! 10

पापे कृते यदि भवन्ति भयानुतापलज्जाः पुनः करणमस्य कथं घटेत ।
मोहेन मे न भवतीह भयादिलेशस्तस्मात्पुनः पुनरघं यतिराज ! कुर्वे ॥



பாபே க்ருதே யதி பவந்தி பயாநுதாபஜ்ஜா : புந : கரணமஸ்ய கதம் கடேத ।
மோஹேந மே ந பவதீஹ பயாதிலேசஸ்தஸ்மாத்புந:புநரகம் யதிராஜ ! குர்வே ॥

ஸ்வாமி எம்பெருமானுரே ! பாபம் செய்து, அதனுல் அச்சம், அநுதாபம், வெட்கம் இவை உண்டாகுமேயானுல் எப்படி மறுபடியும் பாபம் செய்ய நேரிடும் ? எனக்கோ, இந்தபாபம் செய்வதில் அஜ்ஞானத்தினடியால் அச்சம், அநுதாபம், வெட்கம் இவை ஏற்படுவதில்லை. ஆகையால் மேலும் மேலும் பாபம் செய்துகொண்டே இருக்கிறேன். 11

अन्तर्बहिस्सकलवस्तुषु सन्तमीशमन्धः पुरस्थितमिवाहमवीक्षमाणः ।
कन्दर्पवश्यहृदयस्सततं भवामि हन्त त्वदग्रगमनस्य यतीन्द्र ! नार्हः ॥

அந்தர்பஹிஸ் ஸகலவஸ்துஷு ஸந்தமீசம்
அந்த : புரஸ்திதமிவாஹமவீக்ஷமாண : ।
கந்தர்ப்பவச்யஹ்ருதயஸ்ஸததம் பவாமி
ஹந்த த்வதக்ரகமநஸ்ய யதீந்த்ர ! நார்ஹ : ॥

எம்பெருமானுரே ! எல்லாப்பொருள்களிலும் உள்ளும் புறமும் ஒக்க வியாபித்துள்ள எம்பெரு மானைப் பிறவிக்குருடன் தன் முன்புள்ள பொருளைக் காண இயலாததுபோல காணமாட்டாதவ னாய், எப்போதும் காமத்துக்கு வசப்பட்ட மனத்தனுய் உள்ளேன். அந்தோ ! தேவரீர் திருமுன்பே வரவும் அடியேன் யோக்யதை யற்றவன். 12

तापत्रयीजनितदुःखनिपातिनोऽपि देहस्थितौ ममरुचिस्तु न तन्निवृत्तौ ।
एतस्य कारणमहो मम पापमेव नाथ ! त्वमेव हर तद्यतिराज ! शीघ्रम् ॥

தாபத்ரயீ ஜநிததுக்க நிபாதிநோபி
தேஹஸ்திதௌ மமருசிஸ்து நதந்நிவ்ருத்தௌ ।
ஏதஸ்யகாரணமஹோ மம பாபமேவ
நாத ! த்வமேவ ஹர தத் யதிராஜ ! சீக்ரம் ॥

ஆத்யாத்மிகம் (சரீரத்தில் வ்யாதி, மனதில் காமக்ரோதங்கள் இவைகளால் உண்டாவன) ஆதி பௌதிகம் (பிசாசம், உரகம், ராக்ஷசர் இத்யாதிகளால் உண்டாவன) ஆதிதைவிகம் (சீதம், உஷ்ணம், வர்ஷம் இத்யாதிகளால் உண்டாவன) எனப்படும் மூன்று தாபங்களாலும் உண்டாக்கப்பட்ட துன்பங்களில் உழல்பவனேயாயினும், என் ஆசையெல்லாம் இவ்வுடலைப் பேணுவதியேயாம். இந்த தோஷத்தைப் போக்கிக் கொள்வதில் ருசியுண்டாவதில்லை. இந்த நிலைக்குக் காரணம் என்பாபமேயாகும். ஸ்வாமிந்! அந்த பாபத்தை தேவரீரே சீக்கிரமாக மாய்த்தருள வேணும். 13

वाचामगोचरमहागुणदेशिकाग्र्य कूराधिनाथकथिताखिलनैच्यपात्रम् ।
एषोऽहमेव न पुनर्जगतीदृशस्तद्रामानुजार्य करुणैवतु मद्गतिस्ते ॥

வாசாமகோசர மஹாகுணதேசிகாக்ர்ய
கூராதிநாதகதிதாகில நைச்யபாத்ரம் ।
ஏஷோஹமேவ ந புநர் ஜகதீத்ருசஸ் தத்
ராமாநுஜார்ய ! கருணைவது மத்கதிஸ்தே ॥



மொழியைக்கடக்கும் பெரும்புகழாளரும், ஆசார்யர்களில் தலைசிறந்தவருமான கூரத்தாழ்வான் (தம்முடைய ஸ்துதிகளில் தமக்குள்ளதாக) சொல்லிக் கொண்ட சம்ஸ்தநைச்யங்களுக்கும் (தோஷங்களுக்கும்) உண்மையில் பாத்திரமாயிருப்பவன் இந்த ஜகத்தில் அடியேன் ஒருவனேயாகும். இப்படி தோஷமுடையவன் வேறு எவனுமில்லை. ஆகையால் தேவரீருடைய (திருவருளுக்கு ச்சரியான கொள்கலம்) திருவருள் என்னையே பற்றியுள்ளது. [பாபியான எனக்கு அருள் செய்யாமல் விட்டாயாகில் என்போல் உனக்கருள் செய்யத்தகுந்தவன் கிடைக்கமாட்டான்—ஸ்தோத்ரரத்னம்—50] 14

शुद्धात्मयामुनगुरूत्तमकूरनाथ भट्टाख्यदेशिकवरोक्तसमस्तनैच्यम् ।
अद्यास्त्यसङ्कुचितमेव मयीह लोके तस्माद्यतीन्द्र ! करुणैव तु मद्गतिस्ते ॥

சுத்தாத்மயாமுந குருத்தமகூரநாத
பட்டாக்யதேசிகவரோக்த ஸமஸ்த நைச்யம் ।
அத்யாஸ்த்யஸங்குசிதமேவ மயீஹலோகே
தஸ்மாத் யதீந்த்ர ! கருணைவ து மத்கதிஸ்தே ॥

எம்பெருமானாரே ! மஹாபரிசுத்தர்களான ஆளவந்தார், கூரத்தாழ்வான், பட்டர் முதலான ஆசார்யச்ரேஷ்டர்கள் தங்கள் ஸ்ரீஸூக்திகளில் தங்கள்பால் சொல்லிக்கொண்ட ஸமஸ்த தோஷங்களும் இந்த லோகத்தில் இப்பொழுது என்னொருவனிடத்திலேயே குறைவின்றி

நிரம்பியுள்ளன; ஆதலால் தேவரீருடைய திருவருளே அடியேனுக்குப்புகல் (அருட்கும்:தே புகல் என்னவுமாம்.) 15

शब्दादिभोगविषया रुचिरस्मदीया नष्टा भवत्विह भवद्दयया यतीन्द्र ! ।

त्वद्दासदासगणनाचरमावधौ यस्तद्दासतैकरसताऽविरता ममास्तु ॥

சப்தாதிபோகவிஷயா ருசிரஸ்மதீயா
நஷ்டா பவத்விஹபவத்தயயா யதீந்த்ர ।
த்வத்தாஸதாஸகணநாசரமாவதௌ ய:
தத்தாஸதைகரஸதா அவிரதா மமாஸ்து ॥

எம்பெருமானாரே! சப்தாதி விஷயங்களையநுபவிக்க வேண்டுமென்கிற அடியேனுடைய ஆசை தேவரீருடைய திருவருளாலே தொலையவேணும்; தேவரீருடைய அடியாரடியார்களை எண்ணிக்கொண்டு போகையில் கடைசியிலுள்ள அடியவர்க்கு அடியேன் அடிமைப் பட்டிருப்பதிலே ஊற்றமானது அடியேனுக்குத் தொடர்ந்து நடக்கவேணும். [நீக்கமில்லா அடியார் தம்மடியார் அடியார் அடியார் எங்கோக்கள்—திருவாய்மொழி, 8-10-10] 16

श्रुत्यग्रवेद्य निजदिव्य गुणस्वरूपः प्रत्यक्षतामुपगतस्त्विह रङ्गराजः ।

वश्यस्सदा भवति ते यतिराज ! तस्माच्छक्तस्स्वकीयजनपापविमोचने त्वम् ॥

ச்ருத்யக்ரவேத்யநிஜதிவ்ய குணஸ்வரூப:
ப்ரத்யக்ஷதாபமுகதஸ்த்விஹ ரங்கராஜ: ।
வச்யஸ்ஸதா பவதி தே யதிராஜ தஸ்மாத்
சக்தஸ்வகீயஜந பாபவிமோசநே த்வம் ॥

எம்பெருமானாரே! வேதாந்தங்களில் கேட்டறிய வேண்டும்படியுள்ள தன்குணங்கள், ஸ்வரூபம் இவைகளையுடையவனு(யினும்) இந்த லோகத்தில் (தன் பெருமை அறிந்து ஈடுபடுவாரில்லாத ஸம்ஸாரமண்டலத்தில்) எல்லாருக்கும் ப்ரத்யக்ஷமாய்க் காணும்படியுள்ள ஸ்ரீரங்கநாதன் எப்போதும் தேவரீருக்கு வச்யனாக (ஏவிக்கார்யம் கொள்ளும்படி) உள்ளான். ஆதலால் தம்மடியார்களின் பாபத்தைப் போக்கியருள்வதில் தேவரீர் சக்தியுள்ளவர். (அடியேனுக்கு க்ருபை பண்ணவேணும்). 17

कालत्रयेपि करणत्रयनिर्मितातिपापक्रियस्य शरणं भगवत्क्षमैव ।

सा च त्वयैव कमलारमणेऽर्थिता यत्क्षेमस्य एव हि यतीन्द्र ! भवच्छ्रितानाम् ॥

காலத்ரயேபி கரணத்ரய நிர்மிதாதி
பாபக்ரியஸ்ய சரணம் பகவத்க்ஷமைவ।
ஸா ச த்வயைவ கமலாரமணேர்த்திதா யத்
க்ஷேமஸ்ஸ ஏவ ஹி யதீந்த்ர! பவத்ச்ரிதாநாம் ॥

எம்பெருமானாரே! முக்காலங்களிலும் (சென்றது, நிகழ்வது, வருவது) முக்கரணங்களாலும் (மனம், மெய், மொழி) அதிகமான பாபங்களைச் செய்தவனுக்கு எம்பெருமானது பொறுமை யொன்றே புகலாகும்; அந்த பொறுப்பது (க்ஷமை) தானும் தேவரீராலேயே நம்பெருமாளிடம் வேண்டப்பட்டது யாதொன்று உண்டோ, அதுவே தேவரீரை அடிபணிந்தவர்களுக்கு க்ஷேம மளிக்கவேண்டும். (சரணாகதி கத்யத்தில் பண்ணிய ப்ரார்த்தனையடியாக, "உமக்கும் உம் முடைய ஸம்பந்த ஸம்பந்திகளுக்கும் ஒரு குறையுமிருக்காது" என்று நம் பெருமாளருளிச் செய்த வார்த்தையை இங்கு நினைவில் கொள்ளவேணும்.) 18

श्रीमन्यतीन्द्र ! तव दिव्यपदाब्जसेवां श्रीशैलनाथकरुणा परिणामदत्ताम् ।
तामन्वहं मम विवर्धय नाथ ! तस्याः कामं विरुद्धमखिलं च निवर्तयत्वम् ॥

ஸ்ரீமந்யதீந்த்ர தவதிவ்ய பதாப்ஜஸேவாம்
ஸ்ரீசைலநாத கருணாபரிணாமதத்தாம் ।
தாமந்வஹம் மம விவர்த்தய நாத! தஸ்யா: ।
காமம் விருத்த மகிலஞ்ச நிவர்த்தயத்வம் ॥

எமக்குத் தலைவரான எம்பெருமானாரே! (அடியேனுடைய ஆசார்யரான) திருமலையாழ்வாருடைய திருவருள் மிகுதியினால் அடியேனுக்கு அளிக்கப்பட்ட தேவரீருடைய திருவடிகளில் கைங்கர்யத்தை தினமும் வளரச் செய்தருளவேணும்; அதற்கு விரோதிகளான எல்லா விருப்பங்களையும் தேவரீரே தவிர்த்தருளவேணும். (உடையவர் திருவடிகளை ப்ராப்யமாகக் காட்டிக்கொடுத்தது அஸ்மதாசார்யரான திருவாய்மொழிப்பிள்ளை. இந்த ப்ராப்யவிஷயத்தில் கைங்கர்யருசியை பெருகும்படி அருளவேண்டும். இதற்கு விரோதமாகவுள்ள இதர விஷயங்களில் காமத்தை (பகவத்காமத்தையும் கூட) போக்கியருள வேண்டும். மற்றை நம் காமங்கள் 19
மாற்று.)

विज्ञापनं यदिदमद्य तु मामकीनमङ्गीकुरुष्व यतिराज दयाम्बुराशे ।
अज्ञोऽयमात्मगुणलेशविवर्जितश्च तस्मादनन्यशरणो भवतीति मत्वा ॥

விஜ்ஞாபநம் யதிதமத்யது மாமகீநம்
அங்கீகுருஷ்வ யதிராஜ! தயாம்புராசே! ।
அஜ்ஞோயமாத்மகுணலேசவிவர்ஜிதச்ச
தஸ்மாதநந்ய சரணோ பவதீதிமத்வா ॥

கருணைக்கடலான எம்பெருமானாரே! (காரேய் கருணையிராமநுசா! என்று அமுதனார் வாக்கு) தேவர் திருவடிகளில் ப்ரார்த்திக்கும் இவன் (அடியேன்) தத்வஹித புருஷார்த்தங்கள் பற்றிய ஞானமில்லாதவன்; ஆத்மகுணங்கள் சிறிதுமில்லாதவன்; ஆகையால் "இவன் நம்மைத்தவிர்த்து வேறு புகலில்லாதவன்" என்று திருவுள்ளம் பற்றி இப்போது அடியேன் விண்ணப்பம் செய்தவைகளை (ச்லோகம் 16, 17, 18, 19) தலைக்கட்டியருள்வதாக அங்கீகரித்தருளவேணும்.

தயைகஸிந்துவான தேவரீருடைய இன்னருளையே பற்றுசாகக்கொண்டு அடியேன் செய்த பரார்த்தனையை அங்கீகரித்துத் தலைக்கட்டி யருளவேணும். "வேறு புகலில்லாதவன்; நம் க்ருபைக்குத் தகுந்த பாத்திரம்" என்று திருவுள்ளம் பற்றவேணும் என்று ப்ரார்த்தித்துத் 20
தலைக்கட்டுகிறார். இந்தச்லோகம் மந்த்ரபுஷ்பத்தில் கடைசியில் அநுஸந்தேயம்.

इति यतिकुलधुर्यमेधमानैः श्रुतिमधुरैरुदितैः प्रहर्षयन्तम् ।
वरवरमुनिमेव चिन्तयन्ती मतिरियमेति निरत्ययं प्रसादम् ॥

இதி யதிகுலதுர்யமேதமானை: ச்ருதிமதுரைருதிதை: ப்ரஹர்ஷயந்தம் ।
வரவரமுநிமேவ சிந்தயந்தீ மதிரியமேதி நிரத்யயம் ப்ரஸாதம் ॥

எம்பெருமானார் திருவடிகளே சரணம்

ஜீயர் திருவடிகளே சரணம்

॥ श्रीः ॥

श्रीवरवरमुनिभिरनुगृहीतं

## ॥ देवराजमङ्गलम् ॥

மணவாளமாமுனிகள் அருளிச்செய்த

# தேவராஜ மங்களம்



தேவாதிராஜன்

### தனியன்

यश्चक्रे देवराजाय मङ्गलाशासनं मुदा । तं वन्दे रम्यजामातृमुनिं विशदवाग्वरम् ॥

யச்சக்ரே தேவராஜாய மங்களாசாஸனம் முதா
தம் வந்தே ரம்யஜாமாத்ருமுநிம் விசதவாக்வரம்

ஸ்ரீதேவராஜமங்களாசாஸநஸ்துதியை உகந்து அருளிச்செய்த விசதவாக் சிகாமணிகளென்று ப்ரஸித்தரான மணவாளமாமுனிகளை வணங்குகிறேன்.

---

मंगलं वेधसो वेदिमेदिनीगृहमेधिने । वरदाय दयाधाम्ने धीरोदाराय मङ्गलम् ॥

மங்களம் வேதஸோ வேதிமேதிநீக்ருஹமேதிநே ।
வரதாய தயாதாம்நே தீரோதாராய மங்களம்॥ 1

பிரமனுடைய (யாகத்தில்) உத்தரவேதிஸ்தலத்தை இருப்பிடமாகவுடையவரும், பேரருளாளனும், மஹா தீரனும் உதாரனுமான வாதராஜப் பிரானுக்குப் பல்லாண்டு.

वाजिमेधे वपाहोमे धारुरुत्तरवेदितः । उदिताय हुताद्भेरुदाराङ्गाय मङ्गलम् ॥

வாஜிமேதே வபாஹோமே தாருருத்தாவேதித :
உதிதாய ஹுதாதக்நேருதாராங்காய மங்களம்

பிரமனுடைய அச்வமேதயாகத்தில் வபையையெடுத்து ஹோமம் செய்தவுடனே உத்தர வேதியில் ஹோமாக்நியிலிருந்து உதித்தருளினவரும், அழகிய வரதனுமான பெருமானுக்குப் பல்லாண்டு. 2

यजमानं विधिं वीक्ष्य स्मयमानमुखश्रिये । दयमानदृशे तस्मै देवराजाय मङ्गलम् ॥

யஜமாநம் விதிம் வீக்ஷ்ய ஸ்மயமாந முகச்ரியே
தயமாநத்ருசே தஸ்மை தேவராஜாய மங்களம்.

தம்மை ஸாக்ஷாத்தரிக்கும் பொருட்டு வேள்விவளர்த்த பிரமனை நோக்கிப் புந்நகை செய்து கொண்டு அருள் நோக்கம் தந்தருளின தேவப்பெருமாளுககுப் பல்லாண்டு. 3

वारिदश्यामवपुषे विराजत्पीतवाससे । वारणाचलवासाय वारिजाक्षाय मङ्गलम् ॥

வாரிதச்யாமவபுஷே விராஜத்பீதவாஸஸே।
வாரணசலவாஸாய வாரிஜாக்ஷாய மங்களம்॥

கருமுகில்போல்வதோர் மேனியுடையவரும், பீதகவாடை திகழும் திருவரையுடையவரும், திருவத்திமா மலையைத் தன்னிருப்பிடமாகக் கொண்டவரும் செந்தாமரைக் கண்ணருமான தேவப்பெருமாளுக்குப் பல்லாண்டு. 4

अद्यापिसर्वभूतानामभीष्टफलदायिने । प्रणतार्तिहरायास्तु प्रभवे मम मङ्गलम् ॥

அத்யாபி ஸர்வபூதாநாம் அபீஷ்டபலதாயிநே।
ப்ரணதார்த்திஹாராயாஸ்து ப்ரபவே மம மங்களம்॥

பிரமனுக்கு அருள் செய்தது போலவே இன்றும் ஸகல ஜீவராசிகளுக்கும் வேண்டிய பலன்களெல்லாவற்றையும் அருளுபவரும், ஆச்ரிதர்களின் இன்னல்களைக்களைந்தருளுபவரும், அடியேனுடைய ப்ரபுவுமான தேவப் பெருமாளுக்குப்பல்லாண்டு. 5

दिव्यावयसौन्दर्य दिव्याभरणहेतये । दन्तावलगिरीशाय देवराजाय मङ्गलम् ॥

திவ்யாவய ஸௌந்தர்ய திவ்யாபரண ஹேதயே।
தந்தாவளகிரீசாய தேவராஜய மங்களம்॥

திவ்யமான அவயவ ஸௌந்தர்யமுடையவரும், திவ்யமான ஆயுத, ஆபரணங்களைப்பூண்டவரும் ஸ்ரீ ஹஸ்திகிரி நாதருமான தேவப்பெருமாளுக்குப் பல்லாண்டு. 6

पुरुषाय पुराणाय पुण्यकोटि निवासिने । पुष्पितोदारकल्पद्रुकमनीयाय मङ्गलम् ॥

புருஷாய புராணாய புண்யகோடி நிவாஸிநே!
புஷ்பிதோதார கல்பத்ருகமநீயாய மங்களம்॥

புண்யகோடி விமானத்தில் எழுந்தருளியிருப்பவரும், அநாதி ஸித்த புருஷரும், பூத்த அழகிய கல்பகவ்ருக்ஷம் போல் விரும்பத்தக்கவருமான தேவப்பெருமாளுக்குப் பல்லாண்டு. 7

काञ्चनाचलशृङ्गाग्रकालमेघानुसारिणे । सुपर्णांसावतंसाय सुरराजाय मङ्गलम् ॥

காஞ்சநாசலச்ருங்காக்ர காளமேகாநு ஸாரிணே ।

ஸுபர்ணாம்ஸாவதம்ஸாய ஸுரராஜாய மங்களம் ॥ 8

பொன்மயமானதொரு மலையுச்சியின்மேல் காளமேகம் திகழ்வதுபோல் பெரிய திருவடியின் திருத்தோள்கலங்காரமாகின்ற தேவப் பெருமாளுக்கு மங்களம்.

भोगापवर्गयोरेकं वाञ्छद्भ्यो ददते द्वयम् । श्रीमद्वरदराजाय महोदाराय मङ्गलम् ॥

போகாபவர்க்கயோ ரேகம் வாஞ்சத்ப்யோ நததே த்வயம் ।

ஸ்ரீமத்வரதராஜாய மஹோதாராய மங்களம் ॥ 9

இஹலோகத்தில் போகங்களையோ பரலோகத்தில் போகங்களையோ ஏதொன்றையே விரும்பிக் கேட்டாலும் இரண்டையுமே தந்தருளும் பேரருளாளனான வரதராஜப் பெருமாளுக்குப் பல்லாண்டு.

मतङ्गजाद्रितुङ्गाग्रशृङ्गशृङ्गारवर्ष्मणे । महाकृपाय मद्रक्षादीक्षितायास्तु मङ्गलम् ॥

மதங்கஜாத்ரிதுங்காக்ரச்ருங்க ச்ருங்கார வர்ஷ்மணே ।

மஹாக்ருபாய மத்ரக்ஷா தீக்ஷிதாயாஸ்து மங்களம் ॥ 10

ஸ்ரீ ஹஸ்திகிரியின் மிக வுயர்ந்த உச்சிக்கு அலங்காரமாயிருக்கும் திருமேனியையுடைய வரும், அடியேன்போல்வாரை ரக்ஷித்தருள்வதில் தீக்ஷை கொண்டவருமான பேரருளாளப் பிரானுக்குப் பல்லாண்டு.



श्रीकाञ्चीपूर्णमिश्रेण प्रीत्या सर्वाभिभाषिणे । अतीतार्चाव्यवस्थाय हस्त्यद्रीशाय मङ्गलम् ॥

ஸ்ரீமத்காஞ்சீ பூர்ணமிச்ரேண ப்ரீத்யா ஸர்வாபிபாஷிணே ।

அதீதார்ச்சாவ்யவஸ்தாய ஹஸ்த்யத்ரீசாய மங்களம். 11

அர்ச்சாவதாரஸமாதியைக்கடந்து திருக்கச்சி நம்பிகளுடன் மிகவும் ப்ரீதியுடன் எப்போதும் வார்த்தையாடியருளின ஹஸ்திகிரீசனான பெருமாளுக்குப் பல்லாண்டு.

अस्तु श्रीस्तनकस्तूरीवासनावासितोरसे । श्रीहस्तिगिरिनाथाय देवराजायमङ्गलम् ॥

அஸ்து ஸ்ரீஸ்தந கஸ்தூரீ வாஸநாவாஸி தோரஸே ।

ஸ்ரீஹஸ்திகிரி நாதாய தேவராஜாய மங்களம் ॥ 12

பெரிய பிராட்டியார் எப்போதும் திருமார்புடன் அணைந்திருக்கையால் அவள் மார்பில் சாத்தின கஸ்தூரிக்காப்பின் நறுமணம் கமழும் திருமார்பையுடைய தேவப் பெருமாளுக்குப் பல்லாண்டு.

मङ्गलाशासनपरैः मदाचार्यपुरोगमैः । सर्वैश्च पूर्वैराचार्यैः सत्कृतायास्तु मङ्गलम् ॥

மங்களாசாஸனபரை: மதாசார்ய புரோகமை: ॥

ஸர்வைச்ச பூர்வைராசார்யை: ஸத்க்ருதாயாஸ்து மங்களம் ॥ 13

எப்போதும் பல்லாண்டு பாடிக்கொண்டிருக்கும் அடியேனுடைய ஆசார்யர் முதலான எல்லா பூர்வாசார்யர்களாலும் போற்றப்பெற்ற பெருமானுக்குப் பல்லாண்டு.

ஜீயர் திருவடிகளே சரணம்

ஸ்ரீ:

மணவாளமாமுனிகள் அருளிச்செய்த

# உபதேசரத்தினமாலை

முன்னுரை

## உபதேசரத்தினமாலை யநுபவம்

ஸ்ரீமதுபயவே. வேளுக்குடி வரதாசாரியர் ஸ்வாமி

திருவாய்மொழிப்பிள்ளை திருவடிகளையாச்ரயித்து அவருபதேசத்தாலே திருவாய்மொழி தொடக்கமான அசேஷதிவ்ய ப்ரபந்தங்களுடையவும், அதின் தாத்பர்யமான அசேஷரஹஸ்யங்களுடையவும் அர்த்தங்களையும் அதிகரித்து க்ருதார்த்தராயிருப்பாராய், அந்தப்பிள்ளை தாமே, குருபரம்பரையாகிற ஹாரத்துக்கு நடுநாயகரத்நம் என்னும்படி ஔஜ்ஜ்வல்யத்தை உண்டாக்கும்படியான உடையவர் திருவடிகளையே 'உமக்கொருதுணையாகப் பற்றிரும்' என்று உகப்பின் மிகுதியாலே காட்டிக்கொடுக்க, அத்தாலே உடையவர் திருவடிகளிலே அதிமாத்ர ப்ராவண்யத்தையுடையராய் அதுவே நிரூபகமாக "யதீந்த்ர ப்ரவணர்" என்று பெரிய பெருமாளாலே போற்றப்பட்ட ஆசார்யஸார்வ பௌமராகிறார் நம் மணவாளமாமுநிகள். திருவரங்கம் திருப்பதியையிருப்பாகக் கொண்டவராகையாலே "கோயில் மணவாள மாமுநிகள்" என்று நிரூபகமாம்படியிருப்பார் ஒருவரிறே. "மணவாள மாமுநியை இனி யொப்பார்களில்லை உலகேழிலும் உம்பருரிலும்" என்னும்படி உபய விபூதியிலும் தம்முடைய சேஷத்வாதி குணங்களுக்கு உபமாநமின்றிக்கே யிருப்பாரொருவரிறே. இப்படிப்பட்ட வைபவத்தையுடைய மாமுநிகள் அருளிச்செய்த ப்ரபந்தங்கள், வியாக்யாநப்ரபந்தங்கள் ஸ்வதந்த்ரப்ரபந்தங்கள் என இருவகையாயிருக்கும். தத்வத்ரய வ்யாக்யாநம், ஸ்ரீவசநபூஷணவ்யாக்யாநம், முமுக்ஷுப்படி வ்யாக்யாநம், ஆசார்யஹ்ருதய வ்யாக்யானம் முதலியவை வ்யாக்யாநப்ரபந்தங்கள். உபதேசரத்திநமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்திப்ரபந்தம், யதிராஜ விம்சதி, முதலியவை ஸ்வதந்த்ரப்ரபந்தங்கள். இவற்றில் இவர் அருளிச்செய்த உபதேசரத்திநமாலையைச் சற்றேயநுபவித்து க்ருதார்த்தர்கள் ஆவோம்.



ஆழ்வார்களுடையவும் ஆசார்யர்களுடையவும் அவதாரவைபவமும், அவர்கள் திருவாக்கும், அவர்கள் அநுட்டானங்களும் ஒருவர்க்கும் தெரியாதபடி ஸங்குசிதமாக வருகிறபடியையும், ஸம்சாரிகளுடைய ஜ்ஞாநமாந்த்யத்தையும் கண்டு மாமுநிகள், தம்முடைய கரைபுரண்ட கருணையாலே, ஆழ்வார்களுடைய அவதாரரஹஸ்யாதிகள், ஆழ்வார்கள் அருளிச்செயல்கள், இவையிரண்டையும் அறிந்துள்ள ஆசார்யர்களுடைய உக்தயநுட்டாநங்கள் இவை தொடக்கமான வர்த்தங்களை லோகத்தார் அறிந்து உஜ்ஜீவிக்கும்படி "உபதேசரத்திநமாலை" யாகிற இப்ரபந்தமுகேந வெளியிட்டருளுகிறார். உபதேசபரம்பரா ப்ராப்தங்களான அர்த்தங்களை இப்ப்ரபந்தம் ப்ரதிபாதிக்கிறதாகையால் உபதேசரத்திநமாலை என்றே இதற்குத்திருநாமம் அமைந்தது. பிள்ளையைப்பெற்ற தகப்பன் தன் பிள்ளைக்குத் தானே நாமகரணம் செய்யுமாபோலே மாமுநிகளும் தாமருளிச் செய்த இந்த ப்ரபந்தத்துக்குத் தாமே திருநாமமும் இட்டருளினர்.

"ஸர்வம் அஷ்டாக்ஷராந்தஸ்த்தம்" என்கிறபடியே ஸகல வேதஸாரமான திருமந்த்ரத்தில் சொல்லப்பட்ட அர்த்தங்கள் ஸ்வரூபோபாய புருஷார்த்தங்களும் அவற்றின் உள்ளபடி நிலையும் ஆகும். பகவதநந்யார்ஹ சேஷத்வம் நமஸ்வரூபம். பாகவத சேஷத்வம் ஸ்வரூபயாதாத்ம்யம். இந்த உண்மையான ஸ்வரூபத்தை நம்மாழ்வார், "பயிலும்

சுடரொளி '', '' நெடுமாற் கடிமை '' என்கிற திருவாய் மொழிகளிலே விவரித்தருளிச் செய்துள்ளார். அத்தையடி யொற்றியதே கண்ணிநுண் சிறுத்தாம்பு. அதின்படி இராமாநுச நூற்றந்தாதி. ஆழ்வார்கள் வைபவத்தையும் எம்பெருமானார் வைபவத்தையும் இந்த ப்ரபந்தம் ப்ரதிபாதிக்கிற தாகையால், அவையிரண்டையும் அடி யொற்றியது என்னலாம்.

ஸ்ரீ கீதையும் அபயப்ரதாநமும் அருளிச்செய்த ப்ரதமாசார்யனான ஸர்வேச்வரன் அவதரித்த ரோஹிணீ புநர்வஸு தொடக்கமான நக்ஷத்திரங்களும், ஆவணி சித்திரை முதலான மாதங்களும், யமுனா ஸரயூ முதலிய நதி தீரங்களான மதுரை அயோத்யை தொடக்கமான திவ்ய தேசங்களும் இதிஹாஸ புராண ப்ரஸித்தங்களாகத் திகழ்கின்றன. அவற்றை யாதரித்து நாம் உபலாலநம் செய்கிறோம். இது நம் ஸ்வரூபாநுரூபமான தொன்று. ஆழ்வார்கள் அவதரித்த மாதங்கள் திருநக்ஷத்திரங்கள் திவ்யதேசங்கள் இவை தொடக்கமானவற்றை நாம் அறிந்து உபலாலநம் செய்வது நம் ஸ்வரூபத்தின் உள்ளபடி நிலையாகும். ஆகவே நம் மாமுநிகள், இவற்றை நாம் அறிந்து உபலாலநம் செய்து ஸ்வரூபயாதாத்ம்யப்ரகாசம் அடையுமாறு இந்த உபதேசரத்திநமாலையை யருளிச் செய்தார்.

பொய்கையார் தொடக்கமாக திருமங்கையாழ்வார் ஈருகவுள்ள ஆழ்வார்கள் ப்ரதமபர்வ நிஷ்டர்கள். இவர்கள் வைபவத்தை முதல் முன்னமே அருளிச் செய்து பிறகு ஆசார்ய நிஷ்டை படைத்த ஆண்டாள் மதுரகவிகள் எம்பெருமானுர் இம்மூவர் வைபவத்தைப் பேசியபநுவிக்கிறார்.



ப்ரதம பர்வநிஷ்டருடைய வைபவத்தையும், சரமபர்வநிஷ்டர் வைபவத்தையும் தத்திவ்யஸூக்தி வைபவத்தையும், பூர்வாசார்ய வசநப்ரசுரமான ஸ்ரீவசநபூஷணத்தின் வைபவத்தையும், ஸங்கரஹேண ததர்த்தங்களையும் இப்ரபந்தத்தில் அருளிச்செய்கிறார் நம் மாமுநிகள். ஏதத்ப்ரபந்தஸம்பந்தமுடையார் எதிராஜ ரின்னருளால் சதிராக வாழ்ந்திடுவர் என்று பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார். "எந்தை திருவாய் மொழிப்பிள்ளை யின்னருள்'', என்று தொடங்கி, '' எந்தை எதிராசர் இன்னருள் '' என்று முடிக்கையாலே "எந்தை திருவாய் மொழிப்பிள்ளையின்னருளால், உந்தன் உறவை உணர்த்தியபின், இந்த உயிர்க்கு எல்லாவுறவும் நீ யென்றே எதிராசா! நிலை நில்லாததுண்டோ என்னெஞ்சு'' "ஸ்ரீமந் யதீந்த்ர தவ திவ்யபதாப்ஜஸேவாம் ஸ்ரீசைலநாத கருணா பரிணாம தத்தாம்'' என்ற நிஷ்கர்ஷம் தெளிவாயிற்று. **எம்பெருமானுர் ஒருவரே உத்தாரகர். மற்றையோர் உபகாரகர் என்றபடி.** '' அஸ்மத் குருதயாயா: யதீந்த்ராங்கீ க்ரியாங்வய:'' என்றிறே தத்வதீப உபக்ரமத்தில் வாதிகேஸரி அழகிய மணவாள ஜீயரும் அருளிச்செய்தது.

அந்தமிழால் நற்கலைகள் ஆய்ந்துரைத்த வாழ்வார்கள் அவதரித்த மாதங்களை ஐப்பசி தொடங்கி அடைவேயருளிச் செய்கிறார். மற்றுள்ள வாழ்வார்களுக்கு முன்னே வந்து தித்து அதுவேஹேதுவாக முதலாழ்வார்கள் என்று வ்யவஹரிககப்படும் பொய்கையார் பூதத்தார் பேயார் அவதரித்த ஐப்பசியை முதலிலே அருளிச்செய்தார். திருப்பாணாழ்வாரும் கலியனும் கடைசியிலே அவதரித்தவர்களாயினும் ஐப்பசி கார்த்திகை என்று மாஸங்களை இந்த அடைவிலே சொல்லும் ஸௌகர்யத்தையுட் கொண்டு முதலாழ்வார் வைபவத்திற்குப் பிறகு திருப்பாணாழ்வார் திருமங்கையாழ்வார்கள் இவர்கள் வைபவத்தை யநுபவிப்பதாகக் கார்த்திகையை யருளிச்செய்கிறார்.

ஆழ்வார்கள் திருநக்ஷத்திரங்களில் சில முப்புரியூட்டின திருநக்ஷத்ரங்கள். பாகவதாசார்ய ஸம்பந்தமுடையன என்றபடி. இவை திருவோணமும் ரோஹிணியும் புநர்வஸுவும் ஸ்வாதியுமாகும். திருவோணத்தில் வாமந பகவானும் பொய்கையாரும் பிள்ளைலோகாசார்யரும் அவதரித்துள்ளார்கள். ரோஹிணியில் ஸ்ரீக்ருஷ்ணனும் திருப்பாணாழ்வாரும் திருக்கோட்டியூர் நம்பியும் எங்களாழ்வானும் பெரியவாச்சான் பிள்ளையும் அவதரித்துள்ளார்கள். புநர்வஸுவில் ஸ்ரீராமனும் குலசேகரரும் முதலி யாண்டானும் எம்பாரும் அவதரித்துள்ளார்கள். ஸ்வாதியில் சிங்கப்பிரானும் பெரியாழ் வாரும் பெரியதிருமலை நம்பியும் வடக்குத்திருவீதிப்பிள்ளையும் அவதரித்துள்ளார்கள்.

முதலாழ்வார்கள் மூவரும் ப்ரணவம்போலே ப்ரதாநராயிருப்பர்கள். த்வாபராந்தத்துக் கும் கலியுக ஆதிக்கும் நடுவுண்டான ஸந்த்யையில் இவர்கள் அவதரித்தார்கள். திருமழிசைப்பிரானும் அவர்கட்குத்தோள் தீண்டியான காலத்திலே யவதரித்தார். மற்றையோர் கலியுக ஆதியிலே அவதரித்தார்கள்.

ப்ரணவ ப்ரதிபாத்யமான வஸ்துவை ப்ரணவாகார விமாந மத்யதத்தில் அநுபவித்த ஆழ்வார் திருப்பாணாழ்வார். ஆகவிறே அக்ஷரத்ரயாத்மகமான ப்ரணவத்தை அகார உகார மகாரங்களாலே முதலிட்டு மூன்று பாட்டினுடைய அடியிலே யருளிச்செய்தபடி.

பெரிய பெருமாள் தொண்டரடிப்பொடிகளை உணர்த்தினர் திருமாலையில். உணர்ந்த ஆழ்வார் பெரிய பெருமாளை உணர்த்தினர் திருப்பள்ளியெழுச்சியில். ஆகவிறே உஷ: காலமான மார்கழியில் அவதரித்தார் இவர். பெரிய கோயிலையும் பெரிய பெருமாளையும் பேணிப்போருமவராய் எம்பெருமானாருக்கும் ஸாக்ஷாதாசார்யரான பெரிய நம்பி அவதாரத் தாலே வந்த ஏற்றமும் உண்டிறே கேட்டைக்கு.

தேவதாந்தர பரத்வஜ்ஞானமாகிற மநோமாலிந்யம் இன்றிக்கே, துய்யமதி பெற்ற மழிசைப்பிரான் பிறந்தநாள் தையில்மகம். இவரே உறுவினவாள் உறையிலிடாதே ஆதிமத் யாந்தம் தேவாந்தராவரத்வக ப்ரதிபாதநபூர்வமாக பகவத் பரத்வத்தை உபபாதிக்குமதுவே ஹேதுவாக "உறையிலிடாதவர்" என்று ஆசார்யஹ்ருதயத்தில் கொண்டாடப்படுமவர் ஆவார்.

மாசிப் புநர்பூசத்தில் அவதரித்தவர் குலசேகரப் பெருமாள். இவர் பிறப்பு என்றால் உடல் பிறவியன்றிக்கே உயிர்ப் பிறவியாயிறே யிருப்பது.

பங்குனியில் ஆழ்வார் அவதாரம் இல்லை.

சித்திரையில் அவதரித்த மதுரகவிகள் வைபவத்தை ஆண்டாள் எம்பெருமானார் வைபவத்தோடு சேர்த்தநுபவிக்கப் போவதாகத் திருவுள்ளம் பற்றி மாசிக்குப் பிறகு வைகாசியை நிர்தேசிக்கிறார்.

வைகாசி விசாகத்தில் அவதரித்தவர் குருகைநாதன். ஆதிப்பிரானை ஆதிநாதன் உண்டாயிருக்க, உபயப்ரதானமானப்ரணம் போன்ற உறை கோயிலிலே ஆழ்வாருடைய நாதத்வம் நடந்து செல்கிறது. அத்தைப் பற்ற "குருகைநாதன்" என்றருளிச் செய்கிறார். ஸ்ரீ க்ருஷ்ணவதாரத்தில் அக்ரூராதிகளான நால்வரிறே வாழ்ந்தது. ஆழ்வார் அவதார காலத்தில் "ஊரும் நாடும் உலகமும் தன்னைப்போல் அவன் பேரும் தார்களுமே பிதற்ற" என்னும்படி நாடு நாடாக வாழ்ந்தது. "அரக்கர், அசுரர் பிறந்தீர் உள்ளீரேல்" என்று

ப்ரஹ்லாத விபீஷணர் சொற் கேளாத அஸுர ராக்ஷஸர்களைத் தேடும்படியாகவன்றோ வமைந்தது. கடல் வண்ணன் பூதங்கள் மண் மேல் மலியப் புகுந்து இசை பாடியாடிய படியைக் கண்டு "பொலிக பொலிக" என்று பல்லாண்டு பாடி உகந்தாரிறே ஆழ்வார்.

பெரியாழ்வார் அவதரித்த நன்னாள் ஆனிதன்னில் ஸ்வாதி. இதுவே சோதி நன்னாள். பொங்கும் பரிவாலே வில்லிபுத்தூர் பட்டர்பிரான் பெற்றான் பெரியாழ்வார் என்றும் பெயர். அவதார காலத்தில் வில்லிபுத்தூர் விட்டு சித்தன், விஷ்ணுபரத்வஸ்தாபந காலத்தில் பட்டர்பிரான் பொங்கும் பரிவாலே திருமாலுக்குப் பல்லாண்டு பாடி, அதனாலே பெருமை பெற்றார். பெரியாழ்வார் ஆனார் என்றபடி.. மற்றையோரது பரிவு. இவரது பொங்கும் பரிவு. மாலுக்கு நேரான மாலிறே இவரது.

வைகுந்தவான்போகந் தன்னையிகழ்ந்து, அஞ்சு குடிக்கொரு ஸந்ததியாய் ஆழ்வார்கள் தம் செயலை விஞ்சி நிற்கும் தன்மையளாய்ப் பிஞ்சாய்ப் பழுத்தாளான ஆண்டாள் அவதரித்தநாள் திருவாடிப் பூரத்தில். கூபத்தில் வீழும் குழவியுடன் குதித்து அவ்வாபத்தை நீக்குமன்னையாகவன்றோ ஆண்டாள் நிலை. பெற்றவர்களும் பிறந்தவனும் "மேஸுதா" "மேபிதா" என்னுமாபோலே, "ஒரு மகள் தன்னையுடையேன்" என்று பெரியாழ்வாரும், "பட்டர்பிரான் கோதை" என்று ஆண்டாளும் அது ஸந்திக்கும்படியாக வன்றோ இவர்கள் பரஸ்பர ஸம்பந்தம். பாண்டவர்களுக்கு ஒருவன் ஸந்தானபீஜம் பரிக்ஷித்து. அவ்வோபாதி இவள் ப்ரபந்நர்களான ஆழ்வார்கள் யாவருக்கும் ஒரு ஸந்ததி. "அஞ்சு பிராயத்திலே பெண் பிள்ளை ஜல்பித்ததுக்கொரு பொருள் உண்டோ?" என்று பெரியோர் வித்தராம்படி, ஐந்து வயதிலே திருப்பாவை பாடிய செல்வி.



சித்திரையில் சித்திரையில் மதுரகவிகள் அவதரித்தார். உண்டபோது ஒரு வார்த்தை யும் உண்ணாதபோது ஒரு வார்த்தையும் சொல்லுவார் பத்துப்பேர் உண்டிறே. அவர்களைச் சிரித்திருப்பார் ஒருவர் உண்டிறே. அவரே இவர்.

யதுகுலநாதனுடைய அவதாரத்தைக் காட்டிலும் யதிகுல துர்யரான எம்பெருமானா ருடைய அவதாரம் அதிசயித மாயிறே யிருப்பது. அவன் பார்த்தன் செல்வத் தேரிலே ஒருவனுக்குத் தெளிவு பிறக்கும்படி நெறியெல்லாம் எடுத்துரைத்தான். எம்பெருமானார் பாரிலே கீதையின் செம்மைப் பொருள் ஸர்வ ஸுக்ரஹமாக வருளிச் செய்தார். இவருப தேசத்தாலேயிறே எல்லோரும் வாழ்ந்தது அனைத்துலகும் வாழப் பிறந்த எதிராஜ மா முனி வரிறே இவர். "குளப்படியிலே நீர் தேங்கினால் குருவிகுடிக்கும். வீராணத்தேரியிலே நீர் தேங்கினால் நாடு விளையும்" என்றிறே, உடையவரின் ஸகல ஜகதுஜ்ஜீவந ஹேதுத்வத்தை ஸ்ரீமந் நாதமுநிகள் அருளிச் செயதார். இவர் அவதரித்த நன்னாள் "சாருவாக மத நீறு செய்து சமணச்செடிக் கனல் கொளுத்தியே சாக்கியக் கடலை வற்றுவித்து மிகுசாங்கியக் கிரி முறிந் திடமாறு செய்திடு காணாதவாதியர்கள் வாய் தகர்த்து, அறமிகுத்து மேல்வந்த பாசுபதர் சிந்தியோடும் வகை வாதுசெய்த எதிராசனார் கூறு மாகுரு மதத்தொடோங்கிய குமரிலன் மதமவற்றின் மேல் கொடியதர்க்கசரம் விட்டபின், குறுகிமாய வாதியாரை வென்றிட, மீறி வாதில் வருபாற்கரன் மதவிலக்கடிக் கொடியெறிந்து போய் மிக்கயாதவ மதத்தை மாய்த்த பெரு வீரர் நாளும் மிக வாழியே" என்று மாமுநிகள் தாமே கொண்டாடும்படியான சித்திரை யில் செய்ய திருவாதிரை. நவரத்ந ஸ்தானீயங்களாய் அப்பொழுதைக கப்பொழுது நவம் நவமான நவப்ரபந்தங்களை யருளிச் செய்து உலகத்தை வாழ்வித்த உத்தமர். திருவாதிரையும் சிவந்தது. இவரும் சிவந்த வடிவுடையவர்.

இவருக்குப் பின்னே, பிள்ளான், நஞ்ஜீயர், பெரியவாச்சான் பிள்ளை, வடக்குத் திருவீதிப் பிள்ளை, அழகிய மணவாளச்சீயர் என்றிவர்கள் திருவாய் மொழியைக் காத்த குணவாளர் ஆவார்.

வடக்குத்திருவீதிப்பிள்ளைக்கு நம் பிள்ளை யின்னருளால் அவதரித்த திருக்குமாரர் பிள்ளை லோகாசார்யர். துன்னு புகழ்க்கந்தாடை தோழப்பர் தம்முகப்பால் நம்பிள்ளைக்குச் சாத்திய ''உலகாரியன்'' என்ற திருநாமத்தை வடக்குத்திருவீதிப்பிள்ளை மன்னு புகழ் மைந்தர்க்குச் சாத்தினுர். இவரே பிள்ளை லோகாசார்யர். இவர் அருளிச் செய்த ரஹஸ்யப் ப்ரபந்தங்கள் பதினெட்டில் திகழ்வசந பூஷணத்தின் சீர்மை மற்றொன்றுக்கில்லை. புகழல்ல விவ்வாரத்தை மெய்யிப்போது. ஸ்ரீவசந பூஷணத்தின் வைபவத்தை ஏழு பாட்டுக்களாலேயும், ததார்த்தங்களை பதிஞேரு பாட்டுக்களாலேயும் மாமுநிகள் அருளிச் செய்கிறுர். இதில் நிஷ்டை பெற்றவர்கள் எந்தை எதிராசர் இன்னருளுக் கிலக்காகி, சதிராக வாழ்ந்திடுவர் என்று பலம் சொல்லித் தலைக்கட்டுகிறுர்.

---

மணவாளமாமுநிகள் அருளிச்செய்த

# உபதேசரத்தின மாலை

உபதேசரத்தினமாலைப்பாசுரங்களுக்குச்சரியாக ஆசார்யபௌத்ரரான ஜீயர் நாயனுர் என்று கொண்டாடப்படும் அபிராமவரார்யரருளிச்செய்த ஸம்ஸ்க்ருதச்லோகங்களுடன்.



श्रीमदाचार्यपौत्रेण अभिरामवरार्येण अनुगृहीता संस्कृतमयी

॥ उपदेशरत्नमाला ॥

## தனியன்

(கோயில் கந்தாடையண்ணன் அருளிச்செய்தது)

முன்னந்திருவாய்மொழிப்பிள்ளை தாமுபதேசித்த நேர்
தன்னின்படியைத் தணவாதசொல் மணவாளமுநி
தன்னன்புடன்செய் உபதேசரத்தினமாலைதன்னைத்
தன்னெஞ்சுதன்னில் தரிப்பவர்தாள்கள் சரண்நமக்கே.

( द्राविडभाषायां वाधूल-वरदनारायण-गुरुविरचितोऽयं मुक्तकश्लोकः )
प्राक् श्रीगिरीन्द्रगुरुराड्डुपदिष्टमार्गे कार्त्स्न्येन सन्निगदता रुचिरोपयन्त्राः ।
स्वप्रेमतस्सुकलितामुपदेशरत्नमालां वहन्ति हृदये मम ते शरण्याः ॥

---

( संस्कृतग्रन्थकर्तृविषयको मुक्तकश्लोकः )

अस्मासु वत्सलतया कृपया च भूयः स्वेच्छावतीर्णमिव सौम्यवरं मुनीन्द्रम् ।
आचार्यपौत्रमभिरामवराभिधानमस्मद्गुरुं परमकारुणिकं भजामि ॥

---

### ஆசார்யக்ருபையால் கிடைத்த உபதேசத்தைப் பேசுவதாகக்கூறல்

எந்தைதிருவாய்மொழிப்பிள்ளை இன்னருளால்
வந்தவுபதேசமார்க்கத்தைச்—சிந்தைசெய்து
பின்னவரும்கற்க உபதேசமாய்ப்பேசுகின்றேன்
மன்னியர்சீர் வெண்பாவில் வைத்து. 1

मद्देशिकद्रविडवेदगुरोः प्रसादात् लब्धं विचिन्त्य सरसादुपदेशमार्गम् ।
पश्चात्तनार्थमुपदेशमिमं ब्रवीमि वृत्ते वसन्ततिलके विनिवेश्य सौम्ये ॥ 1 ॥

### கற்றோர் உகக்கும் ப்ரபந்தம் இது

கற்றோர்கள்தாமுகப்பர் கல்விதன்னிலாசையுள்ளோர்
பெற்றோமெனஉகந்து பின்புகற்பர்—மற்றோர்கள்
மாச்சரியத்தால் இகழில் வந்ததென்னெஞ்சே! இகழ்கை
ஆச்சரியமோதான் அவர்க்கு. 2

नन्दन्ति ये श्रुतिधनाः सुकृतीप्सवोपि यत्नोऽयमस्मदुपकार इति प्रहृष्टाः ।
अन्ये तु मत्सरवशादवधीरयेरन् किं तेन तैरवमतिः किमु विस्मयाय ॥ 2 ॥

### ஆழ்வாராசார்ய ஸ்ரீஸூக்திகளுக்கு வாழ்த்து

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல்வாழி
தாழ்வாதுமில்குரவர்தாம்வாழி—ஏழ்பாரும்

உய்ய அவர்களுரைத்தவைகள்தாம்வாழி
செய்யமறைதன்னுடனே சேர்ந்து. 3

भद्रं शठारिमुखभक्तजनस्य तत्तद्दिव्यप्रबन्धनिवहस्य च दोषलेशात् ।
मुक्तस्य देशिकजनस्य तदुक्तिराशेः उज्जीवनस्य जगतां सहितस्य वेदैः ॥ 3 ॥

### ஆழ்வார்கள் அவதார அடைவு

பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசை
ஐயன் அருள்மாறன் சேரலர்கோன்—துய்யபட்ட
நாதன் அன்பர்தாள்தூளி நற்பாணன் நன்கலியன்
ஈதிவர்தோற்றத்தடைவாமிங்கு. 4

कासार-भूत - महदाह्वय - भक्तिसार - श्रीमच्छठारि - कुलशेखर - भट्टनाथाः ।
भक्तांघ्रिरेणु - मुनियान - कलिद्रुहोऽपि भूमौ वितेनुरनु तत्क्रमतोऽवतारम् ॥ 4 ॥

### ஆழ்வார்கள் திருநக்ஷத்திரங்களைக் கூறுவோம் எனல்

அந்தமிழால்நற்கலைகள் ஆய்ந்துரைத்தஆழ்வார்கள்
இந்தஉலகிலிருள்நீங்க—வந்துதித்த
மாதங்கள்நாள்கள்தன்னை மண்ணுலகோர்தாமறிய
ஈதென்றுசொல்லுவோம் யாம். 5

अविद्यमन्धतमसं परिहर्तुमस्मिन् लोकेऽवतीर्य सरसैर्द्रविडप्रबन्धैः ।
वेदान्विवर्तितवतामवतारमासतारा: क्रमादभिदधे शठजिन्मुखानाम् ॥ 5 ॥

*முதலாழ்வார்கள் திருநக்ஷத்திரங்கள்*

ஐப்பசியில்ஓணம் அவிட்டம்சதயமிவை
ஒப்பிலவாநாள்கள் உலகத்தீர்! —எப்புவியும்
பேசுபுகழ்ப் பொய்கையார்பூதத்தார்பேயாழ்வார்
தேசுடனே தோன்றுசிறப்பால். 6

सवत्र गीतयशसस्सरआह्वयस्य भूताभिधानमहदाह्वययोश्च गुर्वोः ।
दिव्यावतारदिवसानि तुलाख्यमासि तिस्रः क्रमादभिदधे श्रवणादितारा: ॥ 6 ॥

*முதலாழ்வார்களென்ற பெயருக்குக் காரணம்*

மற்றுள்ள ஆழ்வார்களுக்கு முன்னேவந்துதித்து
நல்தமிழால் நூல்செய்துநாட்டையுய்த்த—பெற்றிமையோர்
என்று முதலாழ்வார்களென்னும்பேர் இவர்க்கு
நின்றதுஉலகத்தே நிகழ்ந்து. 7

भक्तेष्वमीषु दशसु प्रथमं परेभ्य एते त्रयस्समुदिता द्रविडागमः स्वैः ।
सस्माज्जगन्ति सकलान्युपजीवयन्तो भक्तास्ततः प्रथम इत्यभिधानमेषाम् ॥ 7 ॥

*திருமங்கையாழ்வாருடைய திருநக்ஷத்திரம்*

பேதைநெஞ்சே! இன்றைப்பெருமை அறிந்திலேயோ ?
ஏதுபெருமை இன்றைக்கென்னென்னில் ?—ஓதுகின்றேன்
வாய்த்தபுகழ்மங்கையர்கோன் மாநிலத்தில்வந்துதித்த
கார்த்திகையில் கார்த்திகைநாள் காண். 8

नावैषि वैभवममुष्य दिनस्य मुग्ध चेतः किमेतदिति प्रच्छसि चेद्ब्रवीमि ।
पश्य त्वमद्य परकालकवेः प्रदीप्ता दिव्योदयो न ननु कार्त्तिककृत्तिकास्ताः ॥ 8 ॥

*கார்த்திகையில் கார்த்திகையின் பெருமை*

மாறன்பணித்த தமிழ்மறைக்கு மங்கையர்கோன்
ஆறங்கம்கூற அவதரித்த—வீறுடைய
கார்த்திகையில் கார்த்திகை நாள் இன்றென்று காதலிப்பார்
வாய்த்தமலர்த்தாள்கள் நெஞ்சே ! வாழ்த்து. 9

अङ्गानि षड्द्रविडवेचतुष्टयस्य कर्तुं शठारिकलितस्य कलिप्रशास्ता ।
यत्राविरास भुवि कार्त्तिककृत्तिकासु तद्वैभवज्ञपदपद्ममुपैहि चेतः ॥ 9 ॥

*திருப்பாணாழ்வார் திருநக்ஷத்திரம்*

கார்த்திகையில்ரோகிணிநாள் காண்மின்இன்றுகாசினியீர்!
வாய்த்தபுகழ்ப்பாணர்வந்துதிப்பால்— ஆத்தியர்கள்
அன்புடனேதான் அமலனாதிபிரான் கற்றதற்பின்
நன்குடனேகொண்டாடும் நாள். 10

अथोर्जमासि ननु रोहिणितारका सा यस्यामवातरदसौ मुनिवाहनार्यः ।

एतत्कृतामलनादिपिरान्प्रबन्धे रज्यद्भिरास्तिकजनैर्दिनमद्य लाल्यम् ॥ 10 ॥

### தொண்டரடிப்பொடி ஆழ்வார் திருநக்ஷத்திரம்

மன்னியசீர்மார்கழியில் கேட்டைஇன்றுமாநிலத்தீர்!
என்னிதனுக்கேற்றமெனில் உரைக்கேன்—துன்னுபுகழ்
மாமறையோன் தொண்டரடிப் பொடியாழ்வார் பிறப்பால்
நான்மறையோர் கொண்டாடும்நாள். 11

ज्येष्ठाऽद्य मासि धनुषि प्रथिमा कुतोऽस्याः प्रच्छयेत चेदिति जनाः कथयामहं वः ।

विप्रेन्द्रभक्तपदरेण्ववतारयोगात् त्रैविद्यवृद्धबहुमानपदं शुभाहः ॥ 11 ॥

### திருமழிசையாழ்வார் திருநக்ஷத்திரம்

தையில்மகம்இன்று தாரணியீர்! ஏற்றம் இந்தத்
தையில்மகத்துக்குச் சாற்றுகின்றேன்—துய்யமதி
பெற்ற மழிசைப்பிரான்பிறந்தநாளென்று
நல்தவர்கள் கொண்டாடும் நாள். 12



तारा जनाः शृणुत तैषमघा किलाद्य तस्या ब्रुवेऽहमतिशायिमहानुभावम् ।

लब्धप्रपन्नमतिवैभवभक्तिसार दिव्यावतार दिवसोऽयमभिज्ञलाल्यः ॥ 12 ॥

### குலசேகர ஆழ்வார் திருநக்ஷத்திரம்

மாசிப்புனர்ப்பூசம் காண்மின் இன்றுமண்ணுலகீர்
தேசித்திவசத்துக் கேதென்னில்—பேசுகின்றேன்
கொல்லிநகர்க்கோன் குலசேகரன்பிறப்பால்
நல்லவர்கள்கொண்டாடும்நாள். 13

कुंभे पुनर्वसुभमद्य विलोकयध्वं तेजः किमह्न इति चेदहमस्य वक्ष्ये ।

कोल्लिपुरीश कुलशेखरजन्मयोगात् श्लाघापदं भवति तारमिदं बुधानाम् ॥ 13 ॥

### நம்மாழ்வார் திருநக்ஷத்திரம்

ஏரார்வைகாசி விசாகத்தினேற்றத்தைப்
பாரோரறியப்பகர்கின்றேன்—சீராரும்
வேதம்தமிழ்செய்தமெய்யன் எழில்குருகை
நாதன் அவதரித்தநாள். 14

आख्यामि चारुतरमाधवमासि राधातारानुभवमवनीजनबोधनाय ।

द्रष्टुस्त्रयीं द्रविडतः कुरुकेश्वरस्य दिव्यावतारदिवसोऽद्य हि सत्यवाचः ॥ 14 ॥

*ஆழ்வார் திருநக்ஷத்திரமும் திருவாய் மொழியும் ஒப்பற்றவை*

உண்டோவைகாசி விசாகத்துக்கு ஒப்பு ஒருநாள்?
உண்டோ சடகோபர்க்கு ஒப்பொருவர்?—உண்டோ
திருவாய்மொழிக்கொப்பு? தென்குருகைக்கு உண்டோ
ஒருபார்தனிலொக்குமூர்? 15

तारं किमस्ति बत माधवमासि राधातुल्यं किमस्ति शठकोपसमान एकः ।
किंवाऽस्ति तद्द्रविडवेदसमः प्रबन्धः किं पत्तनं कुरुकया सममस्ति लोके ॥ 15 ॥

*பெரியாழ்வார் திருநக்ஷத்திரம்*

இன்றைப்பெருமை அறிந்திலையோ ஏழைநெஞ்சே?
இன்றைக்கென்னேற்றமெனில் உரைக்கேன்—நன்றிபுனை
பல்லாண்டுபாடிய நம்பட்டர்பிரான் வந்துதித்த
நல்லானியில் சோதிநாள். 16

अद्य प्रभावमपि मानस किं न वेत्सि कोस्य प्रभाव इति चेत्प्रतिपादयामि ।
पल्लाण्डुगानपरभट्टपतेः प्रसूतिः स्वाती किलाद्य मिहिरे मिथुनं प्रपन्ने ॥ 16 ॥

*ஆனிதன்னில் சோதிநாளின் பெருமை*

மாநிலத்தின்முன் நம்பெரியாழ்வார் வந்துதித்த
ஆனிதன்னில்சோதியென்றால் ஆதரிக்கும்—ஞானியர்க்கு
ஒப்போரில்லை இவ்வுலகுதனில் என்றுநெஞ்சே!
எப்போதும் சிந்தித்திரு. 17

भट्टाधिपोदय इहेत्यधिशुक्रमासं स्वातीं य आर्द्रहृदया मुहुराद्रियन्ते ।
तेषां न सन्ति सदृशा जगतीति चेतः चिन्तामिमामनुकलं परिबृंहयेथाः ॥ 17 ॥

*பெரியாழ்வார் என்று பெயர் வரக் காரணம்*

மங்களாசாசனத்தின் மற்றுள்ள ஆழ்வார்கள்
தங்களார்வத்தளவு தானன்றி—பொங்கும்
பரிவாலே வில்லிபுத்தூர் பட்டர்பிரான் பெற்றான்
பெரியாழ்வாரென்னும் பெயர். 18

भक्तेष्वमीषु मधुशासनमङ्गलानामाशासनेऽनवधिका प्रियता यदस्य ।
भट्टेश्वरस्य पेरियोपपदप्रतीमाल्वारिति प्रववृते तत एव नाम ॥ 18 ॥

*திருப்பல்லாண்டு முதல் திவ்யப்ரபந்தம்*

கோதிலவாம்ஆழ்வார்கள் கூறுகலைக்கெல்லாம்
ஆதிதிருப்பல்லாண்டானதுவும்—வேதத்துக்கு
ஓமென்றுமதுபோல் உள்ளதுக்கெல்லாம்சுருக்காய்
தான் மங்கலமாதலால். 19

अन्यस्य भक्तनिवहस्य निबन्धनानामेतत्कृतादिमनिबन्धनमादिरासीत् ।
तत्सारसङ्ग्रहतयाऽपि च मङ्गलानामापादनं प्रणववन्निखिलागमानाम् ॥ 19 ॥

### ஆழ்வாருக்கும் திருப்பல்லாண்டுக்கும் ஒப்பில்லை

உண்டோதிருப்பல்லாண்டுக்கு ஒப்பதோர்கலைதான் ?
உண்டோ பெரியாழ்வாருக்கொப்பொருவர் ?—தண்தமிழ்நூல்
செய்தருளும்ஆழ்வார்கள்தம்மில் அவர்செய்கலையில்
பைதல்நெஞ்சே ! நீ உணர்ந்துபார். 20

श्रीभट्टनाथ-तदुपज्ञनिबन्धनाभ्यां कौ वा प्रबन्ध पुरुषौ सदृशौ भवेताम् ।
द्रष्टेष्वमीषु निखिलद्रविडागमानां तेष्वागमेषु च विचिन्तय चेत एतत् ॥ 20 ॥

### ஆண்டாள், மதுரகவிகள், எதிராசர் இவர்கள் திருநக்ஷத்திரம் கூறுவோமெனல்

ஆழ்வார்திருமகளார் ஆண்டாள் மதுரகவி
யாழ்வார் எதிராசராமிவர்கள்—வாழ்வாக
வந்துதித்தமாதங்கள்நாள்கள்தம்மின் வாசியையும்
இந்தவுலகோர்க்கு உரைப்போம்யாம். 21

श्रीविष्णुचित्तदुहितुर्जगतां जनन्याः प्रख्यावतो मधुरपूर्वकवेश्च नाम्ना ।
रामानुजस्य करुणामृतवारिराशेः मासेन साकमवतारदिनं ब्रवीमि ॥ 21 ॥

### ஆண்டாள் திருநக்ஷத்திரம்

இன்றோ திருவாடிப்பூரம் ? எமக்காக
வன்றோ இங்கு ஆண்டாள் அவதரித்தாள் ?—குன்றாத
வாழ்வான வைகுந்த வான்போகந்தன்னை இகழ்ந்து
ஆழ்வார் திருமகளாராய். 22



मासे शुचौ प्रथमफल्गुनिका हि सषा गोदाऽत्र खल्ववतार सुरक्षितुं नः ।
भोगांश्च पारमपदानवमत्य नित्यान् भट्टेश्वरस्य महिता दुहिता भवन्ती ॥ 22 ॥

### ஆண்டாளுக்கும் ஆடிப்பூரத்துக்கும் ஒப்பில்லை

பெரியாழ்வார் பெண்பிள்ளையாய் ஆண்டாள் பிறந்த
திருவாடிப்பூரத்தின் சீர்மை—ஒருநாளைக்கு
உண்டோ மனமே! உணர்ந்துபார் ஆண்டாளுக்கு
உண்டாகில் ஒப்புஇதற்கும் உண்டு. 23

श्रीविष्णुचित्तदुहितृत्ववरेण्यगोदादिव्योदयेन महिता शुचिफल्गुनीयम् ।
तत्तुल्यमस्ति किमु चिन्तय चित्त तारं गोदोपमा यदि भवेत्तदिदं तदा स्यात् ॥ 23 ॥

### ஆண்டாள் பெருமை

அஞ்சுகுடிக்கு ஒரு சந்ததியாய் ஆழ்வார்கள்
தஞ்செயலை விஞ்சிநிற்கும் தன்மையளாய்—பிஞ்சாய்ப்
பழுத்தாளை ஆண்டாளைப் பத்தியுடன்நாளும்
வழுத்தாய் மனமே! மகிழ்ந்து. 24

बंहीयसः प्रणयतो भगवत्यजस्रमस्थानरक्षणभयाकुलवंशजाताम् ।
भक्तानमून् निजगुणैरतिवर्तमानां बाल्योऽपि पक्वचरितं भज चित्त गोदाम् ॥ 24 ॥

### மதுரகவியாழ்வார் திருநக்ஷத்திரம்

ஏரார்மதுரகவி இவ்வுலகில் வந்துதித்த
சீராரும் சித்திரையில் சித்திரைநாள்—பாருலகில்
மற்றுள்ள ஆழ்வார்கள் வந்துதித்தநாள்களிலும்
உற்றதெமக்கென்று நெஞ்சே! ஓர். 25

यत्रोदभून्मधुरपूर्वककविर्महीयान् तामद्वितीयविभवां मधुमासि चित्राम् ।
उक्तान्यभक्तनिवहोदयवासरान्नः क्षेमङ्करीमनुदिनं हृदयावधेहि ॥ 25 ॥

### மதுரகவிகளின் ப்ரபந்தத்தின் சீர்மை

வாய்த்ததிருமந்திரத்தின் மத்திமமாம்பதம்போல்
சீர்த்தமதுரகவி செய்கலையை—ஆர்த்தபுகழ்
ஆரியர்கள்தாங்கள் அருளிச்செயல்நடுவே
சேர்வித்தார் தாற்பரியம்தேர்ந்து. 26

मन्त्राधिपे महति मद्यपदं यथाऽसीदेवं हि पूर्वगुरवो द्रविडागमानाम् ।
आकूतमन्यजनदुर्ग्रहमत्र मत्वा मध्ये न्यधुर्मधुरपूर्वकवेः प्रबन्धम् ॥ 26 ॥

### உடையவர் திருநக்ஷத்திரம்

இன்றுலகீர்! சித்திரையில் ஏய்ந்த திருவாதிரைநாள்
என்றையினும் இன்றிதனுக்கு ஏற்றமென்தான்?—என்றவர்க்குச்
சாற்றுகின்றேன்கேண்மின் எதிராசர்தம்பிறப்பால்
நால்திசையும் கொண்டாடும் நாள். 27



आर्द्रभमद्य खलु मासि मधौ मनोज्ञे को वान्यतोऽस्य गरिमेत्यनुयोगभाजाम् ।
वक्ष्ये यतीश्वरसमुद्भववैभवेन तारं तदेतदखिलैः परिलालनीयम् ॥ 27 ॥

### சித்திரைத் திருவாதிரையின் பெருமை

ஆழ்வார்கள் தாங்கள் அவதரித்த நாள்களிலும்
வாழ்வானநாள்நமக்கு மண்ணுலகீர்!—ஏழ்பாரும்
உய்ய எதிராசருதித்தருளும் சித்திரையில் 28
செய்ய திருவாதிரை

दिव्योदयर्क्षनिवहाच्छठजिन्मुखानां नक्षत्रमेतदधिकं कुशलावहं नः ।
आर्द्राह्वयेन विदिते मधुमासभाजि यत्राविरास भगवान् यतिसार्वभौमः ॥ 28 ॥

### இதுவுமது

எந்தையெதிராசர் இவ்வுலகில் எந்தமக்கா
வந்துதித்த நாளென்னும் வாசியினால்—இந்தத்
திருவாதிரைதன்னின் சீர்மைதனை நெஞ்சே! 29
ஒருவாமல் எப்பொழுதும் ஓர்.

अस्मद्गुरोर्यतिपतेः करुणांबुराशेस्त्राणाय नो भुवि लसद्भवतारकेति ।
आर्द्राभवैभवमनन्यसमानमेतद्वेलासु चित्त निखिलास्वनुसन्दधीथाः ॥ 29 ॥

### ஆழ்வார்களின் திருவவதார ஸ்தலங்கள்

எண்ணருஞ்சீர்பொய்கைமுன்னோர் இவ்வுலகில் தோன்றியஊர்
வண்மைமிகுகச்சி மல்லைமாமயிலை—மண்ணியில்நீர்
தேங்கும்குறையலூர் சீர்க்கலியன்தோன்றியஊர்
ஓங்கும்உறையூர்பாணனூர். 30

एतास्सरः प्रमुखजन्मभुवो हि काञ्ची मल्ला मयूरनगरी कलिवैरिणस्तु ।
जन्मस्थली कुरैयल्लूरिति विश्रुता भूरुत्पत्तिभूमिरुरयूर्मुनिवाहनस्य ॥ 30 ॥

### இதுவுமது

தொண்டரடிப்பொடியார் தோன்றியஊர் தொல்புகழ்சேர்
மண்டங்குடியென்பர் மண்ணுலகில்—எண்திசையும்
ஏத்தும் குலசேகரனூரெனஉரைப்பர்
வாழ்த்த திருவஞ்சிக்களம். 31

पृथ्व्यां हि भक्तपदरेण्ववतारभूमिर्मण्डङ्गुडीति नगरी महिता प्रतीता ।
विख्यातकीर्तिकुलशेखरजन्मदेशः प्रख्यावती निचुलनामपुरी जगत्याम् ॥ 31 ॥

### இதுவுமது

மன்னுதிருமழிசை மாடத்திருக்குருகூர்
மின்னுபுகழ்வில்லிபுத்தூர் மேதினியில்—நன்னெறியோர்
ஏய்ந்தபத்திசாரர் எழில்மாறன் பட்டர்பிரான்
வாய்ந்துதித்த ஊர்கள்வகை. 32



मान्या महीरसपुरीत्यभिधानरम्या पृथ्वीजनस्य कुरुकाऽपि च विल्लिपुत्तूर् ।
श्रीभक्तिसार-शठशातन-विष्णुचित्त-जन्मस्थलानि भुवनप्रथितान्यमूनि ॥ 32 ॥

### இதுவுமது

சீராரும்வில்லிபுத்தூர் செல்வத்திருக்கோளூர்
ஏரார்பெரும்பூதூர் என்னுமிவை—பாரில்
மதியாரும் ஆண்டாள் மதுரகவியாழ்வார்
எதிராசர் தோன்றியஊர் இங்கு. 33

गोदासमुद्भवपुरं भुवि विल्लिपुत्तूरकोलूरुपूर्मधुरपूर्वकवेः प्रसूतिः ।
रामानुजस्य करुणावरुणालयस्य मान्ये महोपपदभूतपुरेऽवतारः ॥ 33 ॥

### அருளிச்செயல் வியாக்யானங்களைப் பற்றி

ஆழ்வார்களேற்றம் அருளிச்செயலேற்றம்
தாழ்வாதுமின்றி அவைதான்வளர்த்தோர்—ஏழ்பாரும்
உய்யஅவர்கள்செய்த வியாக்கியைக ளுள்ளதெல்லாம்
வையமறியப் பகர்வோம் வாய்ந்து. 34

भक्तान्पराङ्कुशमुखानपि तत्प्रबन्धान् तद्वैभवार्हमुपलालयतां गुरूणाम् ।
उज्जीवनाय जगतामुदिताः प्रतीता दिव्यप्रबन्धविषयाः कथयामि टीकाः ॥ 34 ॥

### ஆழ்வார்களும் அருளிச்செயல்களும் பெருமதிப்புக்குறியவை

ஆழ்வார்களையும் அருளிச்செயல்களையும்
தாழ்வா நினைப்பவர்கள்தாம் நரகில்—வீழ்வார்க
ளென்று நினைத்து நெஞ்சே! எப்பொழுதும் நீஅவர்பால்
சென்றணுகக் கூசித்திரி.

भक्तेषु तेषु वकुलाभरणादिमेषु तत्तत्प्रबन्धनिवहे कृतभक्तिमान्द्यात् । 35
घोरे पतन्ति नरके तत एव तांस्त्वं चेतो जहीहि न कदाचन संस्तुवीथाः ॥ 35 ॥

### ஆசாரியர்கள் பெருமை

தெருளுற்ற ஆழ்வார்கள் சீர்மையறிவாரார்?
அருளிச்செயலை அறிவாரார்?—அருள்பெற்ற
நாதமுனி முதலான நம்தேசிகரையல்லால்
பேதைமனமே! உண்டோ? பேசு

प्राज्ञावदग्रसर केसरभूषणादि भक्तप्रभावमपि दिव्यनिबन्धनानि । 36
नाथादयो यदि परं न भवेयुरार्याः के वा विदन्ति हृदय त्वामिदं ब्रवीथाः ॥ 36 ॥

### எம்பெருமானாரின் இன்னருள்

ஓராண்வழியாய் உபதேசித்தார் முன்னோர்
ஏராரெதிராசரின்னருளால்—பாருலகில்
ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள்! கூறுமென்று
பேசிவரம்பறுத்தார் பின். 37



एकैकपूरुषसुरक्षितवंशरीत्या गुप्ता प्रपत्तिपदवी गुरुभिः पुराणैः ।
रामानुजस्तु परया दयया दयालुः सीमामिमामतिययौ जगतां हिताय ॥ 37 ॥

### எம்பெருமானார் தரிசனம்

எம்பெருமானார் தரிசனமென்றே இதற்கு
நம்பெருமாள் பேரிட்டுநாட்டிவைத்தார்—அம்புவியோர்
இந்தத்தரிசனத்தை எம்பெருமானார் வளர்த்த
அந்தச் செயலறிகைக்கா. 38

अस्योचितां परमवैदिकदर्शनस्य रामानुजार्यरचितोपकृतिं कृतज्ञः ।
रङ्गेश्वरः प्रथयितुं रचयाञ्चकार रामनुजस्य मतमित्यभिधानमस्य ॥ 38 ॥

### திருவாய்மொழியைக் காத்த குணவாளர்கள்

பிள்ளான்நஞ்சீயர் பெரியவாச்சான்பிள்ளை
தெள்ளார்வடக்குத் திருவீதிப்—பிள்ளை
மணவாளயோகி திருவாய்மொழியைக்காத்த 39
குணவாளரென்று நெஞ்சே! கூறு,

चन्द्रो यतीन्द्रजलधेः कुरुकाधिपार्यः श्रीमाधवो मुनिरुभावपि कृष्णसूरी ।
योगीन्द्रसुन्दरवरो हि सहस्रगाथाव्याख्या व्यधुर्हृदय ! ताननिशं भजेथाः ॥ 39 ॥

### வியாக்கியானமருளியவர்களுக்கு நன்றி

முந்துறவேபிள்ளான் முதலானோர் செய்தருளும்
அந்தவியாக்கியைகளன்றாகில் — அந்தோ!
திருவாய்மொழிப்பொருளைத் தேர்ந்துரைக்கவல்ல 40
குருவார் ? இக்காலம் நெஞ்சே! கூறு.

एताश्शठारिकृतगीतिसहस्रटीकाः क्लृप्ता न चेद्गुरुवरैः कुरुकेमुख्यैः ।
तस्य प्रबन्धतिलकस्य हि हन्त भावं जानन्ति कोऽद्य हृदय त्वमुदीरयेथाः ॥ 40 ॥

### ஆறாயிரப்படி

தெள்ளாரும் ஞானத்திருக்குருகைப்பிரான்
பிள்ளான் எதிராசர்பேரருளால் — உள்ளாரும்
அன்புடனே மாறன்மறைப்பொருளை அன்றுரைத்தது 41
இன்பமிகும் ஆறாயிரம்.

निसीमनिर्मलधिया कुरुकाधिपेन लब्ध्वा प्रसादलहरीं यतिपुङ्गवस्य ।
गाथासहस्रविषया विहिता हि टीका सङ्गृह्णती सकलमात्मनि षट्सहस्री ॥ 41 ॥

### ஒன்பதினாயிரப்படி

தஞ்சீரைஞானியர்கள் தாம்புகழும் வேதாந்தி
நஞ்சீயர்தாம் பட்டர்நல்லருளால் — எஞ்சாத
ஆர்வமுடன் மாறன்மறைப்பொருளை ஆய்ந்துரைத்தது 42
ஏரொன்பதினாயிரம்.

प्रज्ञावतां निरवधिप्रथिमान्तभूमा भट्टारकस्य दयया निगमान्तयोगी ।
यामाततान शठजिन्निगमस्य टीकां सा ग्रन्थतो नवसहस्रमिता समिन्धे ॥ 42 ॥

### இருபத்துநாலாயிரப்படி

நம்பிள்ளைதம்முடைய நல்லருளால்ஏவியிட
பின்பெரியவாச்சான்பிள்ளையதனால் — இன்பா
வருபத்தி மாறன்மறைப்பொருளைச்சொன்னது 43
இருபத்துநாலாயிரம்.

लब्ध्वा कृपासमुदितं कलिवैरिदाससूरेर्निदेशमभयप्रदराजनामा ।
यत् क्लृप्तवान् विवरणं द्रविडागमस्य तद्ग्रन्थतस्त्रीगुणिताष्टसहस्रसङ्ख्यम् ॥ 43 ॥

### ஈடு முப்பத்தாறாயிரப்படி

தெள்ளியதாநம்பிள்ளை செப்புநெறிதன்னை
வள்ளல் வடக்குத்திருவீதிப்பிள்ளை — இந்த
நாடறிய மாறன்மறைப்பொருளை நன்குரைத்தது 44
ஈடுமுப்பத்தாறாயிரம்.

सूक्तीस्सुधाकरसखीः कलिवैरिदासनाम्नो गुरोस्समवलम्ब्य हि कृष्णपादः ।
यांद्राविडोपनिषदो विवृतं चकार षट्त्रिंशता दशशतैः प्रमिताऽमिता सा ॥ 44 ॥

*பன்னீராயிரப்படி*

அன்போடு அழகியமணவாளச்சீயர்
பினபோரும்கற்றறிந்து பேசுகைக்கா—தம்பெரிய
போதமுடன் மாறன்மறையின் பொருளுரைதத்து
ஏதமிலபன்னீராயிரம். 45

पश्चात्तनानपि जनाननुगृह्णता या रम्योपयन्तृमुनिना स्फुटवैभवेन ।
वृत्तिर्व्यधायि शठजिन्निगमस्य सेयं ग्रन्थैर्द्विषड्दशशतैर्मुदमातनोति ॥ 45 ॥

*பெரியவாச்சான் பிள்ளையின் உபகாரம்*

பெரியவாச்சான்பிள்ளை பின்புள்ளவைக்கும்
தெரிய வியாக்கியைகள் செய்வால்—அரிய
அருளிச்செயற்பொருளை ஆரியர்கட்குஇப்போது
அருளிச்செயலாய்த் தறிந்து. 46

प्रायेण सम्यगपरद्रविडागमानां टीकाः कृता यदभयप्रदराजनाम्ना ।
[1] तेनैव तेषु गाहनेषु गतिर्गुरूणां लोकोपदेशसमयेष्वधुनापि रम्याः ॥ 46 ॥

*மற்ற வியாக்யானங்கள் பற்றி*

நஞ்சீயர்செய்தவியாக்கியைகள் நாலிரண்டுக்கு
எஞ்சாமையாவைக்கும் இல்லையே—தம்சீரால்
வையகுருவின்தம்பி மன்னுமணவாளமுனி
செய்யுமவைதாமும் சில. 47



केषांचिदेव विवृतिंद्रविडागमानां वेदान्तिभिर्विरचिता न पुनस्समेषाम् ।
प्रज्ञापरादवरजेन जगद्गुरोस्ताः सौम्योपयन्तृमुनिना कलिताश्च काश्चित् ॥ 47 ॥

*ஈட்டின் ஓராண்வழி பரவர்த்தகர்கள்*

சீரார் வடக்குத்திருவீதிப்பிள்ளை எழு
தேரார் தமிழ்வேதத்துஈடுதனை—தாருமென
வாங்கிமுன்நம்பிள்ளை ஈயுண்ணிமாதவர்க்குத்
தாம்கொடுத்தார் பின்னதனைத்தான். 48

तां कृष्णपादलिखितां शठवैरिवेदव्याख्यां ददस्व महतीमिति कृष्णपादात् ।
आदाय देशिकवरः कलिवैरिदासः प्रदत्त माधवगुरोर्दयमानचेताः ॥ 48 ॥

*இதுவுமது*

ஆங்கவர்பால்பெற்ற சிறியாழ்வானப்பிள்ளை
தாம்கொடுத்தார் தம்மகனார்தம்கையில்—பாங்குடனே
நாலூர்ப்பிள்ளைக்கு அவர்தாம் நல்லமகனார்க்கு அவர்தாம்
மேலோர்க்குஈந்தார் அவரேமிக்கு. 49

तां माधवः पुनरुपाकुरुतात्मसूनोः सोन्यद्वितीयकरुणाख्यवराहसूरेः ।
सोऽपि स्वकीयतनयस्य स चाप्युदारः पश्चात्तनाननुजिघृक्षुरतीव तेभ्यः ॥ 49 ॥

---

1. 46-ல் இரண்டாம் பாதியும் 47-ம் மூலத்தை ஸரியாக அநுசரிக்கவில்லையென்று திருத்தம் செய்யப்பட்டவை. வேறு பாடமுண்டாகில் கண்டு கொள்வது.

*அன்புடையோர் சாற்றும் திருநாமங்கள் பெருமையுற்றவை*

நம்பெருமாள் நம்மாழ்வார் நஞ்சீயர் நம்பிள்ளை
என்பர் அவரவர்தம்ஏற்றத்தால்—அன்புடையோர்
சாற்றுதிருநாமங்கள் தாமென்று நன்னெஞ்சே!
ஏத்துஅதனைச்சொல்லிநீ யின்று. 50

आख्ये मनःकलय नम्बेरुमालथो नम्माळ्वारिति व्यवहृते प्रणयेन भक्तैः ।
नञ्जीयरित्यपि च नाम तथा प्रवृत्तं नम्बिळ्ळैइत्यपि तथा विहितां च संज्ञाम् ॥ 50 ॥

*நம்பிள்ளை லோகாசார்யரென்று திருநாமம் பெற்றது*

துன்னுபுகழ்க்கந்தாடைத்தோழப்பர் தம்முகப்பால்
என்னஉலகாரியனோ என்றுஉரைக்க—பின்னை
உலகாரியனென்னும்பேர் நம்பிள்ளைக்குஓங்கி
விலகாமல் நின்றதுஎன்றும்மேல். 51

वाधूलवंशतिलकोऽसितवारणार्यः प्रीत्या कदापि कलिसूदनदाससूरेः ।
आख्यां जगद्गुरुरिति प्रथितामकार्षीत्तस्मात्तदाप्रभृति सा नियता च तस्मिन् ॥ 51 ॥

*வடக்குத்திருவீதிப்பிள்ளை அந்தத் திருநாமத்தை ஆதரித்தது*

பின்னை வடக்குத்திருவீதிப்பிள்ளை அன்பால்
அன்ன திருநாமத்தை ஆதரித்து—மன்னுபுகழ்

மைந்தர்க்குச்சாற்றுகையால் வந்துபரந்தது எங்கும்
இந்தத்திருநாமம் இங்கு. 52

तां कृष्णपाद उपलालयति स्म संज्ञां कृत्वा तदर्हचरितस्य निजस्य सूनोः ।
तेनैव सा जनहिताय भुवि प्रवृत्ता संज्ञा जगद्गुरुरिति प्रथिता समन्ताम् ॥ 52 ॥

*ஸ்ரீவசனபூஷணத்தின் சீர்மை*

அன்னபுகழ்முடும்பை அண்ணல் உலகாசிரியன்
இன்னருளால்செய்தகலை யாவையிலும்—உன்னில்
திகழ்வசனபூடணத்தின்சீர்மை ஒன்றுக்கில்லை
புகழல்லஇவ்வார்த்தை மெய்இப்போது. 53

को वा प्रबन्ध इहलोकगुरोः प्रबन्धैः सादृश्यमेति सकलेष्वपि वाङ्मयेषु ।
तत्रापि किं वचनभूषणतुल्यमन्यत् ? सत्यं ब्रवीमि तदिदं वचनं न मिथ्या ॥ 53 ॥

*ஸ்ரீ வசனபூஷணம் என்ற பெயருக்கு விளக்கம்*

முன்னம்குரவோர் மொழிந்தவசனங்கள்
தன்னை மிகக்கண்டு கற்றோர்தம்முயிர்க்கும்—இன்னணியாச்
சேரச்சமைத்தவரே சீர்வசனபூடணமென்னும்
பேர் இக்கலைக்கு இட்டார்பின். 54

प्राचां प्रपत्तिपदवीमयतां गुरूणां रोचिष्णुना वचनरत्नकदम्बकेन ।
एतां कृतिं ग्रथयतैव बुधात्मभूषां दत्तं वरं वचनभूषणनामधेयम् ॥ 54 ॥

*ஸ்ரீ வசனபூஷணத்தின்படி நடப்பது அறிது*

ஆர்வசனபூடணத்தின் ஆழ்பொருளெல்லாம்அறிவார் ?
ஆரதுசொன்னேரில் அநுட்டிப்பார் ?—ஒரொருவர்
உண்டாகில் அத்தனைகாண்உள்ளமே! எல்லார்க்கும்
அண்டாததன்றோ அது. 55

जानन्ति के वचनभूषणवारिराशेर्घार्यं सदा हृदि सतामभिधेयरत्नम् ।
के तत्प्रदर्शितपथेन च सञ्चरन्ति यः कोऽपि संभवति चेद्विरलो हि तज्ज्ञः ॥ 55 ॥

*ஸ்ரீ வசனபூஷணத்தின் பொருளறிந்து அநுஷ்டிக்கவிருப்பம் அவச்யம்*

உய்யநினைவுடையீர்! உங்களுக்குச் சொல்லுகின்றேன்
வையகுருமுன்னம் வாய்மொழிந்த—செய்யகலை
யாம் வசனபூடணத்தினுழ்பொருளை கற்றதனுக்
காம் நிலையில் நில்லும்அறிந்து. 56

उन्माद्भवाब्धिकुहराद्द्रुतमुत्तितीर्षा जायेत वो यदि जनास्तदुपाय एषः ।
आलोच्यतां वचनभूषणमात्मनीदं निष्ठीयतां च नियमेन तदुक्तमार्गे ॥ 56 ॥

*இதைக் கல்லாதவர்கள்பால் வருத்தம்*

தேசிகர்பால்கேட்ட செழும்பொருளை சிந்தைதன்னில்
மாசறவேயூன்ற மனனஞ் செய்து—ஆசரிக்க
வல்லார்கள்தாம் வசனபூடணத்தின்வான்பொருளை
கல்லாதது என்னோ! கவர்ந்து. 57

ते देशिकादधिगतान्युपदेशवर्त्मान्यासज्य चेतसि तथाऽऽचरितुं च शक्ताः ।
ते यत्नतो वचनभूषणगूढमर्थं नैवाचरन्ति परिशील्य कुतो न विद्मः ॥ 57 ॥

*இதை வியாக்கியானத்துடன் கற்பது நலம்*

சச்சம்பிரதாயம் தாமுடையோர்கேட்டக்கால்
மெச்சும் வியாக்கியைதானுண்டாகில்—நச்சி
அதிகாரியும்நீர் வசனபூடணத்துக்கற்ற
மதியுடையீர் மத்தியத்தராய். 58

सत्संप्रदायसुदिया सततोपलाल्या लभ्येत चेद्वचनभूषणवाक्यटीका ।
सा व्यञ्जती सकलमस्य पदार्थजातं मध्यस्थयैव दशया ननु भावनीया ॥ 58 ॥

*ஸ்ரீ வசனபூஷணம் இனிதானது*

சீர்வசனபூடணத்தின் செம்பொருளை சிந்தைதன்னுல்
தேரிலுமாம் வாய்கொண்டு செப்பிலுமாம்—ஆரியர்காள் !
என்தனக்குநாளும் இனிதாகநின்றதுஐயோ !
உந்தமக்குஎவ்வின்பம் உளதாம்? 59

सार्थाः स्मरामि यदि वाचनभूषणीया वाचो वदामि यदि वा मधुरा ममापि ।
आर्याः ! कथं नु भवतां मनसि प्रथेरन् भूम्ना धियो हि विषयातिशयावगाहाः ॥ 59 ॥

தன்குருவின் தாளிணைகள்தன்னில் அன்பொன்றில்லாதார்
அன்புதன்பால்செய்தாலும் அம்புயைகோன்—இன்பமிகு
விண்ணாடு தானளிக்கவேண்டியிரான் ஆதலால்
நண்ணார் அவர்கள் திருநாடு. 60

भक्ति विहाय पदयोर्निजदेशिकस्य भक्तिप्रकर्षमपि ये भगवत्ययन्ते ।
तेभ्यो रमासहचरः परमं पदं तद्दातुं न हीच्छति न तेऽपि च तल्लभन्ते ॥ 60 ॥

இதுவுமது

ஞானம் அநுட்டானம் இவை நன்றாகவேயுடைய
னாகுருவை அடைந்தக்கால்—மாநிலத்தீர்!
தேனார்கமலத் திருமாமகள் கொழுநன்
தானே வைகுந்தம்தரும். 61

ज्ञानं परं तदुचिताचरणं च यस्य तस्मिन् गुरौ परमभक्तिजुषे जनाय ।
भौमाः स्वयं मधुरसाविलपद्मजायाः कान्तश्श्रियः करुणय निजधाम दत्ते ॥ 61 ॥

இதுவுமது

உய்யநினைவுண்டாகில் உங்குருக்கள்தம்பதத்தே
வையும் அன்புதன்னை இந்தமாநிலத்தீர்!—மெய்யுரைக்கேன்
பையரவில்மாயன் பரமபதம் உங்களுக்காம்
கையிலங்கு நெல்லிக்கனி. 62

उज्जीवनाय यदि मानसमुत्सुकं वो निष्टीयतां निजगुरोश्चरणारविन्दे ।
सत्यं ब्रवीमि मनुजाः पणिशायिनस्तद्दिव्यं पदं करतामलकं भवेद्वः ॥ 62 ॥

இதுவுமது

ஆசாரியன்செய்த உபகாரமானவது
தூய்தாக நெஞ்சுதன்னில் தோன்றுமேல்—தேசாந்
தரத்திலிருக்க மனந்தான்பொருந்தமாட்டாது
இருத்தலினி ஏதறியோம்யாம். 63

उज्जीवनाय विहिता गुरुणापकारश्चित्ते लगन्ति विमला यदि चेतनानाम् ।
देशान्तरे निवसनं न मनोऽपिमृष्येद्वासः कथं नु भवितेति वयं न विद्मः ॥ 63 ॥

இதுவுமது

தன்னாரியனுக்குத்தான் அடிமைசெய்வது அவன்
இந்நாடுதன்னில் இருக்கும்நாள்—அந்நோர்
அறிந்தும் அதிலாசையின்றி ஆசாரியனைப்
பிரிந்திருப்பாரார்? மனமே! பேசு. 64

अत्रैव केवलमनन्यपरा लभेरन् शुश्रूषणां निजगुरोरुपसेदिवांसः ।
एनां प्रमेयसरणीं प्रतिपद्यमानाः के वा त्यजन्ति निजदेशिकपादमूलम् ॥ 64 ॥

### அசார்யன், சிஷ்யன் இவர்கள் கடமைகள்

ஆசாரியன் சிச்சனுருயிரைப்பேணுமவன்
தேசாரும்சிச்ச னவன்சீர்வடிவை—ஆசையுடன்
நோக்குமவனென்னும் நுண்ணறிவைக்கேட்டுவைத்தும்
ஆர்க்கும் அங்நோர்நிற்கைஅரிதாம். 65

अन्तेसतो गुरुरनारतमात्मरक्षां शिष्यः प्रहृष्यः कुरुतां गुरुदेहरक्षाम् ।
अर्थं सुसूक्ष्ममिममाकलयन्ति चित्ते स्याद्दुर्लभा तदपि वर्त्मनि तत्र निष्ठा ॥ 65 ॥

### பின்பழகிய பெருமாள் ஜீயர் நிஷ்டை

பின்பழகராம் பெருமாள்சீயர் பெருந்திவத்தில்
அன்பதுவுமற்று மிக்கஆசையினுல்—நம்பிள்ளைக்கு
ஆனஅடிமைகள்செய் அந்நிலையைநன்னெஞ்சே!
ஊனமற எப்பொழுதும் ஓர். 66

अत्यादरान्निजगुरुं कलिवैरिदासं नित्यं विभूतिमवमत्य निरन्तरं यः ।
शुश्रूषते स गुरु मानस तस्य निष्ठां पश्चान्मनोहरपतेर्मुनिपुङ्गवस्य ॥ 66 ॥

### பூர்வர்கள் நிஷ்டையே உயர்ந்தது

ஆசாரியர்க ளனைவரும் முன்னுசரித்த
ஆசாரந்தன்னை அறியாதார்—பேசுகின்ற
வார்த்தைகளைக்கேட்டு மருளாதே பூருவர்கள்
சீர்த்த நிலைதன்னை நெஞ்சே! சேர். 67

सर्वेऽपि पूर्वगुरवस्समयेन येन चेरुस्तमाकलयतामयथावदेव ।
वाचो निशम्य वर मानस मा भ्रमीस्त्वं वर्तस्व पूर्वतरदेशिकवर्तनेन ॥ 67 ॥

### நன்னெறியுள்ள ஆஸ்திகர்கள் ஆதரணீயர்கள்

நாத்திகரும் நற்கலையின் நன்னெறிசேர் ஆத்திகரும்
ஆத்திகநாத்திகருமாமிவரை—ஓர்த்து நெஞ்சே!
முன்னவரும் பின்னவரும் மூர்க்கரெனவிட்டு நடுச்
சொன்னவரை நாளும்தொடர். 68

ये नास्तिका हृदय तान् विजहीहि मूर्खास्तानप्यपाकुरु य आस्तिकनास्तिकाश्च ।
ये त्वास्तिका नयपथान्न परिच्यवन्ते तानन्वहं परिचि[illegible]तमोपहन्तॄन् ॥ 68 ॥

### ஸத்ஸங்கம் பெருமையுடைத்து

நல்லமணமுள்ளதொன்றை நண்ணியிருப்பதற்கு
நல்லமணமுண்டாம் நயமதுபோல்—நல்ல
குணமுடையோர் தங்களுடன் கூடியிருப்பார்க்கு
குணமதுவேயாம் சேர்த்திகொண்டு. 69

आमोदवत्कुसुमसंवलनेन यद्वदामोदवान् भवति केशभरोऽप्यगन्धः ।
तद्वद्भवति गुणवज्जनसङ्गमेन वीता गुणैरपि जना गुणवन्त एव ॥ 69 ॥

### தீயவர் ஸஹவாஸம் விலக்க வேண்டுவது

தீயகந்தமுள்ளதொன்றைச் சேர்ந்திருப்பதொன்றுக்கு
தீயகந்தமேறும் திறமதுபோல்—தீய
குணமுடையோர்தங்களுடன் கூடியிருப்பார்க்கு
குணமதுவேயாம் செறிவுகொண்டு. 70

यत्पूतिगन्धमिलनं समुपैति वस्तु तत्पूतिगन्धमचिरादुपजायते हि ।
एतत्क्रमेण रमणीयगुणोऽपि लोके निन्द्यान् गुणान् भजति निन्द्यगुणाश्रयेण ॥ 70 ॥

### ஸ்ரீவசனபூஷணத்தைப் பழிப்பவர் மூர்க்கர்

முன்னோர்மொழிந்த முறைதப்பாமல்கேட்டு
பின்னோர்ந்துதாம்அதனைப் பேசாதே—தந்நெஞ்சில்
தோற்றினதேசொல்லி இதுசுத்தவுபதேசவர
வாற்றதென்பர்—மூர்க்கராவர். 71

प्राचां वचांसि सकलानि निशम्य सम्यक् चित्तेन तान्यवहितेन निजेन मत्वा ।
नैवोपदिश्य कथयन्ति यथावभासं शुद्धान्वयोऽयमिति ये वत ते हि मूर्खाः ॥ 71 ॥

### வாழ்ச்சிக்குவழி



பூருவாசாரியர்கள் போதம்அனுட்டானங்கள்
கூறுவார்வார்த்தைகளைக்கொண்டு நீர்—தேறி
இருள்தருமாஞாலத்தே இன்பமுற்றுவாழும்
தெருள்தருமாதேசிகனைச் சேர்ந்து. 72

प्राचां प्रबोधचरणे विमले गुरूणां ये व्याहरन्ति तदुदाहृतया पदव्या ।
प्रज्ञानिधिं गुरुवरं प्रतिपद्य लोका मोहास्पदे जगति संप्रति मोदिषीध्वम् ॥ 72 ॥

### இப்ரபந்தம் கற்றவர் எதிராசரின்னருளுக்கு இலக்காவர்

இந்த உபதேசரத்தினமாலைதன்னை
சிந்தைதன்னில் நாளும்சிந்திப்பார்—எந்தை
எதிராசரின்னருளுக்கு என்றும் இலக்காகி
சதிராக வாழ்ந்திடுவர் தாம். 73

மணவாளமாமுனிகள் திருவடிகளே சரணம்

बद्धां गुणैरनुगुणैरुपदेशरत्नमालामिमां दधति ये हृदयेन नित्यम् ।
अस्मद्गुरोर्यतिपतेः करुणप्रवाहपात्रीकृताः परमसंपदमाश्रयन्ते ॥ 73 ॥

श्रीमते रम्यजामातृमहामुनये नमः

எறும்பியப்பா அருளிச்செய்தது

மன்னுயிர்காள் ! இங்கே மணவாளமாமுனிவன்
பொன்னடியாம்செங்கமலப்போதுகளை—உன்னிச்
சிரத்தாலேதீண்டில் அமானவனும்நம்மை
கரத்தாலேதீண்டல் கடன். 74

( द्राविडभाषायां देवराजगुरु विरचितोयं मुक्तकश्लोकः )

अज्ञानुषङ्गिपुरुषा रुचिरोपयन्तुरन्नाभिलष्यपदरक्तसरोजसूने ।
सश्रद्धमात्मशिरसा यदि संस्पृशेम प्राप्तस्स नो ध्रुवममानवपाणिसङ्गः ॥ 74 ॥



பொன்னடியாம் செங்கமலம்
ஸ்வாமி திருவடிகளையலங்கரித்த பாதுகைகள்
கவசமிடப்பட்டு ஸ்ரீரங்கம் ஸன்னிதியில் ஸேவை ஸாதிக்கும்படி.
பெரிய ஜீயர் திருவடிகளே சரணம்

ஸ்ரீ:

மணவாளமாமுனிகள் அருளிச்செய்த

# திருவாய்மொழி நூற்றந்தாதி

முன்னுரை

## திருவாய்மொழி நூற்றந்திதாயின் பெருமை

ஸ்ரீமதுபயவே. பெருமாள்கோவில் ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி

"திருவாய்மொழிநூற்றந்தாதி மணவாளமாமுனிகளுருளிச் செய்தது" என்ருலே போதும் இதன் பெருமையையுணர. உலகில் தோன்றியுள்ள அந்தாதி வெண்பா நூல்களில் நிகற்றநூல் இது ஒன்றேயாம். மாமுனிக ளருளிச் செய்த எந்த நூலும் "இது நிகறற்றது, ஒப்பற்றது" என்று சொல்லும்படியாயிருக்கும். அப்படிச் சொல்வதன்று இது; இதன் சிறப்பை யாவருமிசையும்படி நன்கு நிரூபிக்கிறேன் கேண்மின். திருவாய்மொழியாயிரமும் அந்தாதியே. இயற்பாவில் எட்டுதிவ்வியப்ரபந்தங்கள் அந்தாதியே. கண்ணிநுண் சிறுத்தாம்பு அந்தாதியே; பெரியாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் தம்தம் திருமொழிகளிலே ஒவ்வொரு பதிகம் அந்தாதி பாடி யுள்ளார்கள். அவை எல்லாவற்றிலும் செய்யுளைத் தொடங்கும் முறையும் முடிக்கும் முறையும் நூலாசிரியர்கள் தம்தம் இஷ்டத்தைப் பொறுத்தது. தங்களிஷ்டப்படி முடித்த சீரையோ சொல்லையோ எழுத்தையோ தொட்டுக்கொண்டு மேற்பாட்டு ஆரம்பம் செய்வதென்ப தொன்றே அந்தாதி பாடுகிறவர்களனைவரும் கொண்ட நியதியாகும். உதாரணமாக பொய்கையாழ்வார் 'வையம் தகளியா' என்று தொடங்கி 'இடராழி நீங்குகவே இன்று' என்று தம்மிஷ்டப்படி முடித்தார். 'இடராழி நீங்குகவே இங்கு' எனருலும் கேள்வியில்லை. அந்தாதி பாடுவார் வெண்பா விலோ கட்டளைக்கலித்துறையிலோ முடிக்கும் சொல்லை தங்களிஷ்டப்படி பாடியுள்ளார்கள்.

இனி மணவாளமாமுனிகளின் திருவாய்மொழி நூற்றந்தாதியின் அமைப்பைப்பற்றி கேண்மின். நம்மாழ்வார் "உயர்வற" என்று திருவாய்மொழி தொடங்கிய படியால் அதற்குக்கட்டுபட்டு "உயர்வே பரன்படியை" என்று தம்முடைய அந்தாதியைத் தொடங்கினுர். அடுத்த திருவாய்மொழிப் பதிகம் "வீடு மின் முற்றவும்" என்று தொடங்குவதால் (மாமுனிகள் தம் அந்தாதி) அத்தோடும் சேரும்படி "வேராகவே விளையும் வீடு" என்று வீடு என்பதையே கடைச் சீராக வைத்துப் பாசுரத்தை முடித்தார். அதற்கு மேற் பாட்டை அந்தாதியடைவு குலையாதபடி 'வீடு செய்து' என்று தொடங்கினுர். நூறு பாட்டு இந்த நிபந்தனைக்குக் கட்டுப்பட்டே அவதரித்துள்ளன. செய்யுளுக்குறிய மோனையின்பமும் எதுகையின்பமும் கூட தம்மிஷ்டத்தைப் பொறுத்ததல்ல வென்பதை உற்றுநாக்கவேணும்.

வீடு என்றதற்கு மோனை சேரும்படி வேராகவே என்ன வேண்டிற்று. இதற்கு எதுகை சேரும்படி முன்னடியில் வாராமல் என்ன வேண்டிற்று. இவ்வளவோடும் கூட ஒவ்வொரு பதிகத்தின் ஸாரத்தையும் ஒவ்வொரு வெண்பாவில் அடைக்க வேண்டிற்று பாட்டுதோறும் நம்மாழ்வார் திருநாமமும் தவராது வர வேண்டியதாயிற்று. இத்தனை நிர்ப்பந்தங்களையும் கொண்டு பாடின அந்தாதி நூல் இஃதொன்றே தவிர மாநிலத்தில் வேறென்றும் கிடையாது. உண்டெனில் காட்டலாம். "மாமுனிகள் திருவாய்மொழிக்கு இங்ஙனே நூற்றந்தாதி அமைத்தார்; நாமும் பெரிய திருமொழிககு இங்ஙனே ஒரு பிரபந்தமிடுவோம்" என்று ஸங்கற்பித்து ஒரு மஹாகவி முயன்ருல் அப்போதுதான் இதன் அருமை பெருமை தெரியும்.

# திருவாய்மொழி நூற்றந்தாதி

### *தனியன்கள்*

அல்லும்பகலும் அனுபவிப்பார் தங்களுக்கு
சொல்லும் பொருளும் தொகுத்துரைத்தான்—நல்ல
மணவாளமாமுனிவன் மாறன் மறைக்கு
தணவா நூற்றந்ததாதிதான்.

மன்னுபுகழ்சேர் மணவாளமாமுனிவன்
தன்னருளால் உட்பொருள்கள் தம்முடனே—சொன்ன
திருவாய்மொழி நூற்றந்தாதியாம்தேனை
ஒருவாதருந்து நெஞ்சே! உற்று.

---

உயர்வேபரன்படியை உள்ளதெல்லாம் தான்கண்டு
உயர்வேதம்நேர் கொண்டுரைத்து—மயர்வேதும்
வாராமல் மானிடரைவாழ்விக்கும்மாறன் சொல்
வேராகவேவிளையும் வீடு. 1

வீடுசெய்துமற்றெவையும் மிக்கபுகழ்நாரணன்தாள்
நாடுநலத் தாலடையநன்குரைக்கும்—நீடுபுகழ்
வண்குருகூர்மாறன் இந்தமாநிலத்தோர் தாம்வாழ
பண்புடனேபாடியருள் பத்து. 2



பத்துடையோர்க்குஎன்றும் பரனெளியனும் பிறப்பால்
முத்தித்தரும் மாநிலத்தீர்! மூண்டு அவன்பால்—பத்திசெய்யும்
என்றுரைத்த மாறன்தனின் சொல்லால்போம்நெடுகச்
சென்றபிறப்பாமஞ்சிறை. 3

அஞ்சிறையபுட்கள்தமை ஆழியானுக்கு நீர்
என்செயலைச்சொல்லுமென இரந்து—விஞ்ச
நலங்கியதும்மாறன்இங்கே நாயகனைத்தேடி
மலங்கியதும் பத்திவளம் 4

வளம்மிக்கமால்பெருமை மன்னுயிரின்தண்மை
உளமுற்று அங்கூடுருவ வோர்ந்து—தளர்வுற்று
நீங்கநினைமாறனைமால் நீடிலகுசீலத்தால்
பாங்குடனேசேர்த்தான் பரிந்து. 5

பரிவதிலீசன்படியைப் பண்புடனேபேசி
அரியனலன் ஆராதனைக்கென்று—உரிமையுடன்
ஓதியருள்மாறன் ஒழிவித்தான் இவ்வுலகில்
பேதையர்கள்தங்கள் பிறப்பு. 6

பிறவியற்று நீள்விசும்பின் பேரின்பமுய்க்கும்
திறம் அளிக்கும் சீலத்திருமால்—அறவினியன்
பற்றுமவர்க்குஎன்று பகர்மாறன்பாதமே
உற்றதுணையென்று உள்ளமே! ஓடு. 7

ஓடுமனம்செய்கை உரையொன்றினில்லாதாருடனே
கூடிநெடுமால் அடிமைகொள்ளும்நிலை—நாடறிய
ஓர்ந்தவன்தன் செம்மை உரைசெய்தமாறனென
ஏய்ந்துநிற்கும் வாழ்வாமிவை. 8

இவையறிந்தோர்தம்மளவில் ஈசனுவந்தாற்ற
அவயவங்கள்தோறு மணையும்—சுவையதனைப்
பெற்று ஆர்வத்தால் மாறன்பேசினசொல்பேச மால்
பொன்தாள் நம்சென்னிபொரும். 9

பொருமாழிசங்குடையோன் பூதலத்தேவந்து
தருமாறேரேதுவறத்தன்னை—திரமாகப்
பார்த்துஉரைசெய்மாறன் பதம்பணிகஎன்சென்னி
வாழ்த்திடுக என்னுடையவாய். 10

வாயும்திருமால் மறையநிற்க ஆற்றாமை
போய்விஞ்சி மிக்கபுலம்புதலாய்—ஆய
அறியாதவற்றோடு அணைந்தழுதமாறன்
செறிவாரைநோக்கும் திணிந்து. 11

திண்ணிதாமாறன் திருமால்பரத்துவத்தை
நண்ணி அவதாரத்தே நன்குரைத்த—வண்ணமறிந்து
அற்றார்கள்யாவர் அவரடிக்கேஆங்கவர்பால்
உற்றாரைமேலிடாதூன். 12

ஊனமறவேவந்து உள்கலந்தமாலினிமை
யானது அனுபவித்தற்காம் துணையா—வானில்
அடியார்குழாம்கூட ஆசையுற்றமாறன்
அடியாருடன் நெஞ்சே! ஆடு. 13

ஆடிமகிழ்வானில் அடியார்குழாங்களுடன்
கூடி இன்பமெய்தாக்குறையதனால்—வாடிமிக
அன்புற்றார்தம்நிலைமை ஆய்ந்துரைக்கமோகித்து
துன்புற்றான் மாறன்அந்தோ! 14

அந்தாமத்தன்பால் அடியார்களோடுஇறைவன்
வந்தாரத் தான்கலந்த வண்மையினால்—சந்தாபம்
தீர்ந்தசடகோபன் திருவடிக்கே நெஞ்சமே!
வாய்ந்தஅன்பை நாள்தோறும்வை. 15

வைகுந்தன் வந்து கலந்ததற்பின் வாழ்மாறன்
செய்கின்றநைச்சியத்தைச் சிந்தித்து—நைகின்ற
தன்மைதனைக்கண்டு உன்னைத்தான்விடேனென்றுரைக்க
வண்மையடைந்தான் கேசவன். 16

கேசவனுல்எந்தமர்கள் கீழ்மேலெழுபிறப்பும்
தேசடைந்தாரென்று சிறந்துரைத்த—வீசுபுகழ்
மாறன்மலரடியே மன்னுயிர்க்கெல்லாம் உய்கைக்கு
ஆறென்று நெஞ்சே! அணை 17

அணைந்தவர்கள்தம்முடனே ஆயனருட்காளாம்
குணந்தனையேகொண்டு உலகைக்கூட்ட—இணங்கிமிக
மாசிலுபதேசம்செய் மாறன்மலரடியே
வீசுபுகழ் எம்மாவீடு. 18

எம்மா வீடும்வேண்டா என்தனக்குஉன்தாளினையே
அம்மாஅமையுமென் ஆய்ந்துரைத்த—நம்முடைய
வாழ்முதலாம்மாறன் மலர்த்தாளிணைசூடி
கீழ்மையற்று நெஞ்சே! கிளர். 19

கிளரொளிசேர் கீழுரைத்த பேறுகிடைக்க
வளரொளிமால் சோலைமலைக்கே—தளர்வறவே
நெஞ்சைவைத்துச்சேருமெனும் நீடுபுகழ்மாறன்தாள்
முன்செலுத்துவோம் எம்முடி 20

முடியார்திருமலையில் மூண்டுநின்றமாறன்
அடிவாரந்தன்னில் அழகர்—வடிவழகைப்
பற்றி முடியும்அடியும் படிகலனும்
முற்றும் அனுபவித்தான்முன். 21

முன்னமழகரெழில்மூழ்கும் குருகையர்கோன்
இன்னவளவென்ன எனக்கரிதாய்த்—தென்ன
கரணக்குறையின் கலக்கத்தை கண்ணன்
ஒருமைப்படுத்தான் ஒழித்து. 22

ஒழிவிலாக்காலம் உடனுகிமன்னி
வழுவிலா ஆட்செய்யமாலுக்கு—எழுசிகர
வேங்கடத்துப்பாரித்த மிககநலம்சேர்மாறன்
பூங்கழலை நெஞ்சே! புகழ். 23

புகழொன்றுமால் எப்பொருள்களும்தானுய்
நிகழ்கின்ற நேர்காட்டிநிற்க—மகிழ்மாறன்
எங்கும்அடிமைசெய்ய இச்சித்து வாசிகமாய்
அங்கடிமைசெய்தான் மொய்ம்பால். 24

மொய்ம்பாரும்மாலுக்கு முன்னடிமைசெய்துஉவப்பால்
அன்பால் ஆட்செய்பவரை யாதரித்தும்—அன்பிலா
மூடரைநிந்தித்தும் மொழிந்தருளும்மாறன்பால்
தேடரியபத்திநெஞ்சே ! செய். 25

செய்யபரத்துவமாய்ச் சீரார்வியூகமாய்
துய்யவிபவமாய்த் தோன்றிவற்றுள்—எய்துமவர்க்கு
இந்நிலத்தில் அர்ச்சாவதாரம் எளிதென்றான்
பன்னுதமிழ்மாறன் பயின்று. 26

பயிலும்திருமால் பதந்தன்னில் நெஞ்சம்
தயலுண்டுநிற்கும் ததியற்கு—இயல்வுடனே
ஆளானார்க்கு ஆளாகும் மாறனடியதனில்
ஆளாகார் சன்மம்முடியா. 27

முடியாதஆசைமிக முற்றுகரணங்கள்
அடியார்தம்மைவிட்டு அவன்பால்—படியா ஒன்
றென்றின்செயல்விரும்ப உள்ளதெல்லாம் தாம்விரும்ப
துன்னியதே மாறன்தன்சொல். 28

சொன்னுவில்வாழ்புலவீர் ! சோறுகூறைக்காக
மன்னுதமானிடரை வாழ்த்துதலால்—என்னாகும் ?
என்னுடனேமாதவனை ஏத்துமெனும்குருகூர்
மன்னருளால் மாறும்சன்மம். 29

சன்மம்பலசெய்து தான்இவ்வுலகளிக்கும்
நன்மையுடைய மால்குணத்தை நாள்தோறும்—இம்மையிலே
ஏத்துமின்பம்பெற்றேனெனும் மாறனேஉலகீர் !
நாத்தழும்ப ஏத்தும்ஒருநாள். 30

ஒருநாயகமாய் உலகுக்கு வானோர்
இருநாட்டி லேறியுய்க்கும் இன்பம்—திரமாகா
மன்னுயிர்ப்போகம்தீது மாலடிமையேஇனிதாம்
பனனியிவை மாறனுரைப்பால். 31

பாலரைப்போல்சீழ்கிப் பரனளவில்வேட்கையால்
காலத்தால்தேசத்தால் கைகழிந்த—சால
அரிதானபோகத்தில் ஆசையுற்றுநைத்தான்
குருகூரில்வந்துதித்தகோ. 32

கோவானஈசன் குறையெல்லாம்தீரவே
ஓவாதகாலத்துஉவாதிதனே—மேவிக்
கழித்தடையக்காட்டிக் கலந்தகுணமாறன்
வழுத்துதலால் வாழ்ந்தது இந்தமண். 33

மண்ணுலகில்முன்கலந்து மால்பிரிகையால் மாறன்
பெண்ணிலைமையாய்க் காதல்பித்தேறி—எண்ணிடில்முன்
போலிமுதலான பொருளை அவனுய்நினைந்து
மேல்விழுந்தான் மையல்தனின் வீறு. 34

வீற்றிருக்கும்மால்விண்ணில் மிக்கமயல்தன்னை
ஆற்றுதற்காத் தன்பெருமையானதெல்லாம்—தோற்றவந்து
நன்றுகலக்கப்போற்றி நன்குஉகந்து வீறுஉரைத்தான்
சென்றதுயர்மாறன் தீர்ந்து. 35

தீர்ப்பாரிலாதமயல் தீரக்கலந்தமால்
ஓர்ப்பாதுமின்றி உடன்பிரிய—நோக்க
அறிவழிந்து உற்றுரும்அறக்கலங்க பேர்கேட்டு
அறிவுபெற்ருன் மாறன்சீலம். 36

சீலமிகுகண்ணன் திருநாமத்தால்உணர்ந்து
மேலவன்தன் மேனிகண்டு மேவுதற்கு—சால
வருந்திஇரவும்பகலும் மாருமல்கூப்பிட்டு
இருந்தனனே தென்குருகூரேறு. 37

ஏறுதிருவுடைய ஈசனுகப்புக்கு
வேறுபடில் என்னுடைமை மிக்கவுயிர்—தேறுங்கால்
என்தனக்கும் வேண்டாவெனும் மாறன்தாளைநெஞ்சே!
நந்தமக்குப்பேருக நண்ணு. 38

நண்ணுதுலமாலடியை நானிலத்தே வல்வினையால்
எண்ணுராத்துன்பமுறும் இவ்வுயிர்கள்—தண்ணிமையைக்
கண்டிருக்கமாட்டாமல் கண்கலங்கும்மாறனருள்
உண்டுநமக்கு உற்றதுணையொன்று. 39

ஒன்றுமிலைத்தேவு இவ்வுலகம் படைத்தமால்
அன்றியென ஆருமறியவே—நன்ருக
மூதலித்துப்பேசியருள் மொய்ம்மகிழோன்தாள் தொழவே
காதலிக்கும் என்னுடையகை. 40

கையாரும்சக்கரத்தோன் காதலின்றிக்கேயிருக்க
பொய்யாகப்பேசும் புறனுரைக்கு—மெய்யான
பேற்றைஉபகரித்த பேரருளின்தன்மைதனை
போற்றினேனே மாறன் பொலிந்து. 41

பொலிகபொலிகவென்று பூமகள்கேண்தொண்டர்
மலிவுதனைக் கண்டுகந்துவாழ்த்தி—உலகில்
திருந்தாதார்தம்மைத்திருத்திய மாறன்சொல்
மருந்தாகப்போகும் மனமாசு. 42

மாசறுசோதி கண்ணன்வந்துகலவாமையால்
ஆசைமிகுந்து பழிக்குஅஞ்சாமல்—ஏசறவே
மண்ணில்மடலூர மாறன்ஒருமித்தான்
உள்நடுங்கத் தான்பிறந்தஊர். 43

ஊரநினைந்தமடல் ஊரவும் ஒண்ணுதபடி
கூரிருள்சேர்கங்குலுடன் கூடிநின்று—பேராமல்
தீதுசெய்யமாறன் திருவுள்ளத்துச்சென்றதுயர்
ஓதுவது இங்குஎங்ஙனேயோ ? 44

எங்ஙனேநீர்முனிவது என்னையினி ? நம்பியழகு
இங்ஙனேதோன்றுகின்றது என்முன்னே—அங்ஙன்
உருவெளிப்பாடா வுரைத்ததமிழ்மாறன்
கருதுமவர்க்கு இன்பக்கடல். 45

கடல்ஞாலத்தீசனை முன்காணமல்நொந்தே
உடனு அனுகரிக்கலுற்று—திடமாக
வாய்ந்தவனுய்த்தான்பேசும் மாறனுரையதனை
ஆய்ந்துரைப்பார் ஆட்செய்யநோற்றூர் 46

நோற்றநோன்பாதியிலேன் நுன்தனைவிட்டாற்றகில்லேன்
பேற்றுக்குஉபாயம் உன்தன்பேரருளே—சாற்றுகின்றேன்
இங்கென்னிலையென்னும் எழில்மாறன்சொல்வல்லார்
அங்குஅமரர்க்கு ஆராவமுது. 47

ஆராவமுதாழ்வார் ஆதரித்தபேறுகளை
தாராமையாலே தளர்ந்துமிக—தீராத
ஆசையுடன் ஆற்றுமைபேசி யலமந்தான்
மாசறுசீர் மாறனெம்மான். 48

மாநலத்தால்மாறன் திருவல்லவாழ்புகப்போய்
தானிளைத்துவீழ்ந்து அவ்வூர்தன்னருகில்—மேல்நலங்கித்
துன்பமுற்றுச்சொன்ன சொலவுகற்பபர்தங்களுக்கு
பின்பிறக்க வேண்டாபிற. 49

பிறந்துஉலகம்காத்தளிக்கும் பேரருட்கண்ணு ! உன்
சிறந்தகுணத்தாலுருகும் சீலத்—திறம்தவிர்ந்து
சேர்ந்தனுபவிக்கும்நிலை செய்யென்றசீர்மாறன்
வாய்ந்தபதத்தே மனமே ! வைகு. 50

வைகல்திருவண்வண்டூர் வைகும்இராமனுக்கு என்
செய்கைதனைப் புள்ளினங்காள் ! செப்புமென—கைகழிந்த
காதலுடன்தூதுவிடும் காரிமாறன்கழலே
மேதியினீர் ! நீர்வணங்குமின். 51

மின்னிடையார்சேர்கண்ணன் மெத்தெனவந்தானென்று
தன்னிலேபோய்ப்பெண்ணிலேயாய்த் தான்தள்ளி—உன்னுடனே
கூடேனென்றூடும் குருகையர்கோன்தாள்தோழவே
நாள்தோறும் நெஞ்சமே! நல்கு. 52

நல்லவலத்தால்நம்மைச் சேர்த்தோன்முன்நண்ணுரை
வெல்லும் விருத்தவிபூதியனென்று—எல்லையறத்
தானிருந்துவாழ்த்தும் தமிழ்மாறன்சொல்வல்லார்
வானவர்க்கு வாய்த்தகுரவர். 53

குரவைமுதலாம்கண்ணன் கோலச்செயல்கள்
இரவுபகலென்னுமல் என்றும்—பரவுமனம்
பெற்றேனென்றேகளித்துப் பேசும்பராங்குசன்தன்
சொல்தேனில் நெஞ்சே! துவள். 54

துவளறு சீர்மால்திறத்துத் தொன்னலத்தால் நாளும்
துவளறுதன் சீலமெல்லாம்சொன்னான்—துவளறவே
முன்னமனுபவத்தில் மூழ்கிநின்றமாறனதில்
மன்னுமுவப்பால் வந்தமால். 55

மாலுடனேதான்கலந்து வாழப்பெருமையால்
சாலநைந்துதன்னுடைமை தானடையக்—கோலியே
தானிகழவேண்டாமல் தன்னைவிடல்சொல்மாறன்
ஊனமறுசீர்நெஞ்சே! உண். 56

உண்ணும்சோறுதி ஒருமூன்றும் எம்பெருமான்
கண்ணனென்றேநீர்மல்கிக் கண்ணிணைகள்—மண்ணுலகில்
மன்னுதிருக்கோளூரில் மாயன்பால்போம்மாறன்
பொன்னடியே நந்தமக்குப்பொன். 57

பொன்னுலகுபூமியெல்லாம் புள்ளினங்கட்கேவழங்கி
என்னிடரைமாலுக் கியம்புமென—மன்னுதிரு
நாடுமுதல்தூதுநல்கிவிடும் மாறனையே
நீடுலகீர்! போய்வணங்கும் நீர். 58

நீராகிக்கேட்டவர்கள் நெஞ்சழிய மாலுக்கும்
ஏரார்விசும்பில் இருப்பரிதா—ஆராத
காதலுடன்கூப்பிட்ட காரிமாறன்சொல்லை
ஓதிடவேஉய்யும் உலகு. 59

உலகுய்யமால்நின்ற உயர்வேங்கடத்தே
அலர்மகளைமுன்னிட்டு அவன்தன்—மலரடியே
வன்சரணைச்சேர்ந்த மகிழ்மாறன்தாளிணையே
உன்சரணை நெஞ்சமே! உள். 60

உண்ணிலாவைவருடனிருத்தி இவ்வுலகில்
எண்ணிலாமாயன் எனைநலிய—எண்ணுகின்றான்
என்றுநினைந்தோலமிட்ட இன்புகழ்சேர்மாறனென
குன்றிவிடுமே பவக்கங்குல். 61

கங்குல்பகலரதி கைவிஞ்சிமோகமுற
அங்கதனைக்கண்டோ ரரங்கரைப்பார்த்து—இங்கிவள்பால்
என்செய்யநீரெண்ணுகின்றதென்னும் நிலைசேர்மாறன்
அஞ்சொலுற நெஞ்சுவெள்ளையாம். 62

வெள்ளியநாமம்கேட்டு விட்டகன்றபின்மோகம்
தெள்ளியமால் தென்திருப்பேர்சென்றுபுக—உள்ளம்அங்கே
பற்றிநின்றதன்மை பகரும்சடகோபற்கு
அற்றவர்கள்தாம் ஆழியார். 63

ஆழிவண்ணன்தன் விசயமானவை முற்றும்காட்டி
வாழிதனாலென்று மகிழ்ந்துநிற்க—ஊழிலவை
தன்னைஇன்றுபோல்கண்டு தானுரைத்தமாறன்சொல்
பன்னுவரே நல்லது கற்பார். 64

கற்றோர்கருதும் விசயங்களுக்கெல்லாம்
பற்றாம்விபவகுணப் பண்புகளை—உற்றுணர்ந்து
மண்ணிலுள்ளோர் தம்மிழவை வாய்ந்துரைத்தமாறன்சொல்
பண்ணில் இனிதான தமிழ்ப்பா. 65

பாமருவுவேதம் பகர்மால்குணங்களுடன்
ஆமழகுவேண்டற்பாடாம் அவற்றை—தூமனத்தால்
நண்ணி அவனைக்காண நனகுருகிக்கூப்பிட்ட
அண்ணலைநண்ணார் எழையர். 66

ஏழையர்கள்நெஞ்சை இளகுவிக்கும் மாலழகு
சூழவந்துதோன்றித் துயர்விளைக்க—ஆழுமனந்
தன்னுடனே அவ்வழகைத் தானுரைத்தமாறன்பால்
மன்னுமவர் தீவினைபோம்மாய்ந்து. 67

மாயாமல் தன்னைவைத்த வைசித்திரியாலே
தீயாவிசித்திரமாச் சேர்பொருளோடு—ஓயாமல்
வாய்ந்து நிற்கும்மாயன் வளமுரைத்தமாறனைநாம்
ஏய்ந்துரைத்து வாழுநாள் என்று? 68

என்தனைநீ இங்குவைத்தது ஏதுக்கென மாலும்
என்தனக்கும்என்தமர்க்கும் இன்பமதா—நன்றுகவி
பாடவெனக் கைம்மாறிலாமை பகர்மாறன்
பாடணைவார்க்கு உண்டாம்இன்பம். 69

இன்பக்கவிபாடுவித்தோனே இந்திரையோடு
அன்புற்றுவாழ் திருவாறன்விளையில்—துன்பமறக்
கண்டடிமைசெய்யக் கருதியமாறன்கழலே
திண்திறலோர்யாவர்க்கும் தேவு.

தேவனுறைபதியில் சேரப்பெருமையால் 70
மேவுமடியார்வசனும் மெயந்நிலையும்—யாவையுந்தா
னும்நிலையும்சங்கித்து அவைதெளிந்தமாறன்பால்
மாநிலத்தீர் ! நங்கள்மனம். 71

நங்கருத்தைநன்றாக நாடிநிற்கும்மாலறிய
இங்கிவற்றிலாசை எமக்குளதென் ?—சங்கையினால்
தன்னுயிரல்மற்றில்நசை தானொழிந்த மாறன்தான்
அந்நிலையை ஆயந்துரைத்தான் அங்கு. 72

அங்கமரர்பேண அவர்நடுவேவாழ்திருமாற்கு
இங்கோர்பரிவரிலையென்றஞ்ச—எங்கும்
பரிவருளரென்னப்பயம்தீர்ந்த மாறன்
வரிகழல்தாளேசர்ந்தவர் வாழ்வார். 73

வாராமல்அச்சம் இனிமால்தன்வலியிணையும்
சீரார்பரிவருடன் சேர்த்தியையும் பாருமெனத்
தானுகந்தமாறன்தாள் சார்நெஞ்சே ! சாராயேல்
மானிடவரைச் சார்ந்துமாய். 74

மாயன்வடிவழகைக் காணுதவல்விடா
யாய் அதறவிஞ்சி அழுதலற்றும்—தூயபுகழ்
உற்ற சடகோபனை நாம்ஒன்றிநிற்கும்போதுபகல்
அற்றபொழுதானது எல்லியாம். 75

எல்லிபகல்நடந்த இந்தவிடாய்தீருகைக்கு
மெல்லவந்து தான் கலககவேணுமென—நல்லவர்கள்
மன்னுகடித்தானத்தே மாலிருக்கமாறன்கண்டு 76
இந்நிலையைச் சொன்னான் இருந்து.

இருந்தவன்தான்வந்து இங்கிரெண்ணமெல்லாம்
திருத்திஇவர்தந்திறத்தேசெய்து—பொருந்தக்
கலந்துஇனியனுயிருக்கக் கண்ட சடகோபர் 77
கலந்தநெறி கட்டுரைத்தார்கண்டு.

கண்ணிறையவந்து கலந்தமால்இக்கலவி
திண்ணிலையாவேணுமெனச் சிந்தித்து—தண்ணிதெனும் 78
ஆருயிரினேற்ற மதுகாட்ட ஆய்ந்துறைத்தான்
காரிமாறன் தன்கருத்து.

கருமால்திறத்தில் ஒருகன்னிகையாம்மாறன்
ஒருமாகலவியுரைப்பால்—திரமாக
அந்தியருக்காகாது அவன்தனக்கேயாகும்உயிர்
இந்நிலையை யோர்நெடிதா. 79

நெடுமாலழததனில்நீள்குணத்தில் ஈடு
படுமாநிலையுடைய பத்தர்—அடிமைதனில்
எல்லைநிலம்தாளுக எண்ணினன்மாறன் அது
கொல்லைநிலமான நிலைகொண்டு. 80

கொண்டபெண்டிர்தாம்முதலாக் கூறும்உற்றூர் கன்மத்தால்
அண்டினவரென்றே அவரைவிட்டு—தொண்டருடன்
சேர்க்கும்திருமாலைச் சேருமென்றான் ஆர்க்கும்இதம்
பார்க்கும் புகழ்மாறன்பண்டு. 81

பண்டையுறவானபரனைப் புளிங்குடிக்கே
கண்டு எனக்கு எல்லாவுறவின் காரியமும்—தண்டறநீ
செய்தருளென்றேயிரந்த சீர்மாறன் தாளிணையை
உய்துணையென்று உள்ளமே ! ஓர். 82

ஓராநீர் வேண்டினவை உள்ளதெல்லாம்செகியன்றேன்
நாராயணனன்றோ நானென்று—பேருவைக்
காட்ட அவன்சீலத்தில்கால்தாழ்ந்தமாறனருள்
மாட்டிவிடும் நம்மனத்துமை. 83

மையார்கண்மாமார்பில் மன்னும்திருமலை
கையாழிசங்குடனே காணஎண்ணி—மெய்யான
காதலுடன்கூப்பிட்டுக் கண்டுகந்தமாறன்பேர்
ஓதவுய்யுமே இன்னுயிர். 84

இன்னுயிர்மால்தோற்றினது இங்கென்னெஞ்சிலென்று கண்ணால்
அன்றவனைக்காணவெண்ணி ஆண்பெண்ணாய்—பின்னைஅவன்
தன்னை நினைவிப்பவற்றால் தான்தளர்ந்தமாறனருள்
உன்னுமவர்க்கு வள்ளமுருகும். 85

உருகுமால்என்னெஞ்சம் உன்செயல்க ளெண்ணி
பெருகுமால் வேட்கையெனப்பேசி—மருவுகின்ற
இன்னாப்புடன் அவன்சீ ரேய்ந்துரைத்தமாறன்சொல்
என்னச்சொல்லா திருப்பது எங்கு ? 86

எங்காதலுக்கடி மாலேய்ந்தவடிவழகென்று
அங்காதுபற்றாசா ஆங்கவன்பால்—எங்குமுள்ள
புள்ளினத்தைத் தூதாகப்போகவிடும் மாறன்தாள்
உள்ளினர்க்குத் தீங்கையறுக்கும். 87

அறுக்குமிடரென்று அவன்பால் ஆங்குவிட்டதூதர்
மறித்துவரப் பற்றுமனத்தால்—அறப்பதறிச்
செய்யதிருநாவாயில் செல்லநினைந்தான்மாறன்
மையலினால் செய்வறியாமல். 88

மல்லடிமைசெய்யும்நாள் மால்தன்னைக்கேட்க அவன்
சொல்லுமளவும் பற்றாத்தொன்னலத்தால்—செல்கின்ற
ஆற்றாமைபேசி அலமந்தமாறனருள்
மாற்றாகப்போகும் என்தன்மால். 89

மால்உமதுவாஞ்சைமுற்றும் மன்னுமுடம்பின்முடிவில்
சாலநண்ணிச்செய்வனெனத் தானுகந்து—மேலவனைச்
சீரார்கணபுரத்தே சேருமெனும் சீர்மாறன்
தாராளே நந்தமக்குத்தாள். 90

தாளடைந்தோர்தங்கட்குத் தானேவழித்துணையாம்
காளமேகத்தைக் கதியாக்கி—மீளுதலாம்
ஏதமிலாவிண்ணுலகில் ஏகவெண்ணும் மாறனென
கேதமுள்ளதெல்லாம் கெடும். 91

கெடுமிடர் வைகுந்தத்தைக் கிட்டினாற்போல்
தடமுடைஅனந்தபுரந்தன்னில்—படவரவில்
கண்துயில்மாற்குஆட்செய்யக் காதலித்தான்மாறன் உயர்
விண்தனிலுள்ளோர் வியப்பவே. 92

வேய்மருந்தோளிந்திரைகோன் மேவுகின்றதேசத்தை
தான்மருவாத்தன்மையினால் தன்னைஇன்னம்—பூமியிலே
வைக்குமெனச்சங்கித்து மால்தெளிவிக்கத்தெளிந்த
தக்கபுகழ்மாறன் எங்கள்சார்வு. 93

சார்வாகவேஅடியில் தானுரைத்த பத்திதான்
சீரார்பலத்துடனே சேர்ந்ததனை—சோராமல்
கண்டுரைத்த மாறன்கழலிணையே நாள்தோறும்
கண்டுகக்கும் என்னுடையகண். 94

கண்ணடியிணையில் காதலுறுவார் செயலை
திண்ணமுறவே சுருங்கச்செப்பியே—மண்ணவர்க்குத்
தானுபதேசிக்கை தலைக்காட்டினான்மாறன்
ஆனபுகழ்சேர் தன்னருள். 95

அருளால்அடியிலெடுத்த மாலன்பால்
இருளார்ந்ததம்முடம்பை இச்சித்து—இருவிசும்பில்
இத்துடன்கொண்டேக இவரிசைவுபார்த்திருந்த
சுத்திசொல்லும் மாறன்செஞ்சொல். 96

செஞ்சொற்பரன்தனது சீராரும்மேனிதனில்
வஞ்சித்துச்செய்கின்ற வாஞ்சைதனின்—விஞ்சுதலேக்
கண்டவணேக்காற்கட்டிக் கைவிடுத்துக்கொண்ட
திண்தறல்மாறன் நம்திரு. 97

திருமால்தம்பால் விருப்பம்செய்கின்றநேர்கண்டு
அருமாயத்தன்றகல்விப்பானென்—பெருமால்நீ
இன்றுஎன்பால்செய்வானென்னென்ன இடருற்றுநின்ருன்
துன்னுபுகழ்மாறனேத்தான் சூழ்ந்து. 98

சூழ்ந்துநின்றமால்விசும்பில் தொல்லேவழிகாட்ட
ஆழ்ந்ததனேமுற்றும்அனுபவித்து—வாழ்ந்து அங்கு
அடியருடனே இருந்தவாற்றை உரைசெய்தான்
முடிமகிழ்சேர் ஞானமுனி. 99

முனிமாறன் முன்புஉரைசெய் முற்றின்பம்நீங்கி
தனியாக நின்றுதளர்ந்து—நனியாம்
பரமபத்தியால்நைந்து பங்கயத்தாள்கோனே
ஒறுமையுற்றுச்சேர்ந்தான் உயர்ந்து. 100



மணவாளமாமுனிகள் திருவடிகளே சரணம்

---

ஸ்ரீ:

மணவாளமாமுனிகள் அருளிச்செய்த

# ஆர்த்திப்ரபந்தம்

## முன்னுரை

(ஸ்ரீமத் பிள்ளை லோகம் ஜீயர் அருளிச்செய்த வ்யாக்யானத்தின் அவதாரிகையைத் தழுவியது)

ச்ரியஃபதியான ஸர்வேச்வரன் தனக்கேயடியராயிருக்குமவர்களுக்குத் தன்னை வந்தடையவேணும் என்ற ருசியைப் பிறப்பித்துப் பிறகே தன்னை வந்தடைவதாகிற பேற்றை யளிக்கிறான். அந்த ருசிதான் பரபக்தி, பரஜ்ஞானம் பரமபக்தி இவைகளாக மலருகிறது. அப்படிப்பட்ட பக்தியை ஆழ்வாருக்குப் பிறக்கும்போதே உண்டாகும்படியருளி அவரை அங்கீகரித்தனன். அதைப்பற்றியே "மயர்வறமதி நலமருளினன்"[1] என்றும், "அவாவற்று வீடுபெற்ற"[2] என்றும் அருளிச் செய்தார். அந்த பக்திதான், ஆழ்வார் ஸம்பந்தமடியாக எல்லாருக்கும் அவனை அடைவதற்கு முன்னனமே பெறும்படியாயிருக்கும். அப்படிப் பெறுகைக்காக, "பகவந் பக்திமபிப்ரயச்சமே"[3] என்றும் "பரபக்தியுக்தம் மாம்குருஷ்வ"[4] என்றும் ஆசார்யர்கள் வேண்டியருளினார்கள். அப்படி விரும்பியதை வேண்டிப் பெற்று க்ருதார்த்தராய் "கரைகணடோர்"[5] என்று முக்தராயச் சொல்லப்படுகிற பராங்குச பரகாலாதிகளோடே ஒரு கோவையாய் எழுந்தருளியிருப்பவராய், பின்பும், ருசியுடையோ ரெல்லாருக்கும் ஆச்ரயணீயராகைக்காக தம்முடைய அவதார ஸ்தலத்திலும் மற்றும் பல விடங்களிலும் அர்ச்சாரூபியாய் எழுந்தருளியிருக்கிற எம்பெருமானார் திருவடிகளிலே, தம்முடைய ஆசார்யரான பிள்ளை தம்மை உடையவரிடத்தில் அவரைத் தவிற வேறு யாவருக்குமாகாதபடி அவர் விஷயத்தில் ப்ராவண்யத்தை உண்டாக்கியபடியே, ஆழ்வாருக்கு "க்ருஷ்ணத்ருஷ்ணாதத்வம்" என்று சிறப்பு உண்டானாற்போல் இவருடைய யதிராஜ பக்தியையிட்டே "யதீந்த்ரப்ரவணர்" என்னும்படி, "நையும் மனம் உன் குணங்களையுன்னி"[6] என்று அவருடைய குணங்களிலே ஊன்றிய மனத்தராய் அத்தாலே வகுத்த புகல் என்னும்படியாய் [7] சரமபர்வமான எம்பெருமானார் திருவடிகளை [8] "மெய் கொள்ளக் காணவேணும்" என்று அடங்காத காதலையுடையவராய், மெய்வெளுத்து, இப்படிக் கரைபுரண்ட ஆற்றாமையையுடையராய் இருக்கிற தாம், எம்பெருமானார் அருளாலே தமக்குப் பிறந்த [9] பரமபக்தி தசையைப் பேசி அநுபவித்தருளுகிற வழியால் சரமபர்வ நிஷ்டராய் எம்பெருமானார் திருவடிகளில் அதிகமான பக்தியுடையராயிருக்கும் அதிகாரிகள் எல்லாருக்கும் அநுஸந்தித்து நல்வாழ்வு பெறும்படி இந்தப்ரபந்தம் வழியாக அவற்றை வெளியிட்டருளுகிறார்.

---

1. திருவாய்மொழி 1-1-1
2. திருவாய்மொழி 10-10-11
3. ஸ்தோத்ர ரத்னம் 54
4. சரணாகதி கத்யம்
5. திருவாய்மொழி 8-3-10
6. இராமானுச நூற்றந்தாதி 120
7. இதற்கு மேலான உபாயம் இல்லை என்னும்படி முடிந்த நிலமான
8. திருவாய்மொழி 3-8-4
9. பக்தியின் முதிர்ந்த எல்லை நிலை. திருவாய்மொழியில் கடைசி திருவாய்மொழி காண்க.

பக்தி எல்லாம் தங்கியதென்ன [1] என்னும்படியிறே இவருக்கு எதிராசன் சேவடிமேல் தான் பரமபக்தி தலையெடுத்தது. பரமா பதமாபந்ந: [2], முடிந்தவவா [3], என்னும் பரமார்த்தியை அடைந்து, அந்த தசையைப் பேசின பரசுரமாகையாலே ஆர்த்தி என்று இதற்குப் பெயராயிற்று. ஆர்த்திதான், ஸம்ஸாரத்தில் அடிக்கொதிப்பாலும் வகுத்த விஷயத்தை அநுபவிக்கப் பெருமையாலும் பிறக்குமதாயிறே இருப்பது. அவையிரண்டையும் முந்நீர் ஞாலத்திலும் [4], அறுக்கும் வினையிலும் [5] ஆழ்வார் அருளிச் செய்தார். அத்தைப் பற்றவே "வம்பவிழும் தாரான்", "தேன் பயிலும் தாரான்" என்கிற தனியன்களும் உண்டாயின. அப்படியே இவருக்கும் இரண்டுபடிகளும் நடவா நின்றதேயாகிலும், அதில் அநுபவம் கிட்டாமையினாலுண்டான ஆர்த்தியிறே பெருகிக்கொண்டு இந்தப்ரபந்தத்தில் நடந்து செல்லுகிறது. ப்ராப்தி தசையில் ஆர்த்தியை முன்னிடும் என்னக் கடவதிறே.

இவர் தாம், எம்பெருமானாருடைய ஸமகாலத்திற் போலே ஆழ்வான் முதலான அனைத்து முதலிகளோடும் கூடி தழுவி முழுசிப் பரிமாறி ராமாநுஜன் திருவடித்தாமரைகளின் கைங்கர்யத்திலே அந்வயித்து வாழ வேணுமென்று மநோரதித்தவர்க்கு, அது மாநஸாநுபவமாய். கடந்தகாலமானகையாலே நேரே அடைகைக்கு முடியாததொன்றாகை யாலும், இனி அவர் (எம்பெருமானார்) தேச விசேஷத்திலே (பரமபதத்தில்) நித்ய கைங்கர்ய நிரதராய் இருக்கிறபடியை அநுஸந்தித்து, அவர் விஷயத்திலே தாமுமப்படி வழுவிலா அடிமை செய்து வாழவேணுமென்று, அவர் திருவடிகளிலே ப்ரார்த்தித் தருளுகிறார்.

ஆகையால்தான் "வடுகநம்பி தன்னிலையை எந்தனக்கு நீ தந்து, எதிராசா! எந்நாளும் உந்தனக்கே ஆட்கொள் உகந்து" [6] என்று அருளிச்செய்தது. "அஹம்ஸர்வம் கரிஷ்யாமி" [7] என்ற இளையபெருமாளது நிலை எம்பெருமானாரது. "சத்ருக்நோ நித்ய சத்ருக்ந:" [8] என்று பேசும்படியான நிலை இவரது.

இனி "ஆமுதல்வன்" [9] என்னும்படி அவதாரவிசேஷமாயிருந்துள்ள வ்யக்தி விசேஷங்கள், முகில்வண்ணனடியை அடைந்துய்ந்த [10] ஆழ்வாரும், மாறனடிபணிந்துய்ந்த [11] எம்பெருமானாரும், அவர் திருவடிகளிலே [12] அநந்யசரணரான ஜீயருமாயிறேயுள்ளது.

இப்படி ஆழ்வாரோடும் எதிராசரோடும் ஒரு கோவையான வைபவத்தையுடைய இவர், ஆழ்வாருடையவும், உடையவருடையவும் வைபவங்களைத் திருவாய்மொழி நூற்றந் தாதியாலும் உபதேசரத்தினமாலையாலும் யதிராஜவிம்சதியாலும் அருளிச்செய்து, அங்கும், தம் அபிநிவேசமெல்லாம்தோற்ற, "பராங்குச பாதபக்தம்" [13] என்றும், "சடகோபர்தேமலர்த் தாட்கேய்ந்தினிய பாதுகமாம் எந்தை இராமாநுசன்" [14] என்றும், முடிந்த நிலமாகச் சொல்லப் படுகிற சரமபர்வமே அடையத்தகுந்ததில் எல்லை நிலமானது என்று இச்சரமமார்க்கத்தை சரமகாலத்தே சரமப்ரபந்தரூபேண வெளியிட்டருளுகிறார். யதிராஜவிம்சதியில், "ராமா

1. இரா. நூற்-108, 2. விஷ்ணு தர்மம், 69-47, 3. திருவாய்மொழி 10-10-11, 4. திருவாய்மொழி 7-2, 5. திருவாய்மொழி 9–8. 6. ஆர்த்தி ப்ரபந்தம், 7. ஸ்ரீராமாயணம் - அயோ, 31, 25. 8. ஸ்ரீராமாயணம் அயோ, 1 - 1, 9. திருவாய்மொழி 7 - 9 - 3, 10. திருவாய்மொழி 7 - 2 - 11, 11. இரா. நூற்றந்தாதி - 1, 12. வேறுபுகலை அடையாத 13. யதிராஜவிம்சதி, 14. ஆர்த்தி ப்ரபந்தம் 10.

நுஜம் யதிபதிம் ப்ரணமாமிமூர்த்நா'' என்று தொடங்கி ''தஸ்மாதநந்ய சரணோபவதீதி மத்வா'' என்று தலைக்கட்டுகையாலே, அது [1]ப்ராபகபரமாய் இருக்கும். இங்கு ''வாழி எதிராசன்'' என்று தொடங்கி, ''இந்த வரங்கத்தினிதிரு நீ'' என்று தலைக்கட்டுகையாலே, இது [2]ப்ராப்யபரமாய் இருக்கும். த்வயத்தில் உத்தரவாக்யம் [3]ப்ராப்யத்வரா நுஸந்தான ரூபமாய் இருக்கும். அதிலும் தாத்பர்யமாயிருப்பது இது.

தம் ஆர்த்தியை எம்பெருமானாரிடத்தில் விண்ணப்பிக்கப் புகுந்த இவர், தண்டகாரண்யவாஸிகளான ரிஷிகள் ''ஏஹிபச்ய சரீராணி''[4] என்று ராக்ஷஸர்களாலும் ராவணாலும் நலிவுபட்ட தேஹங்களைப் பெருமாளுக்குக் காட்டி ரக்ஷணம் பெறுவதற்கு முன்னம், அத்தலையில் ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதிகளில் ஈடுபட்டு ''மங்களாநி ப்ரயுஞ்ஜாநா:''[5] என்று மங்களாசாஸனம் பண்ணினாப்போலே, இவரும், தம்மை விஷயீகரிக்க விண்ணின்தலை நின்றும் எழுந்தளின எம்பெருமானாருடைய அப்ராக்ருத திவ்யமங்கள விக்ரஹத்தில் ப்ரகாசிக்கிற ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதிகளைக்கண்டு, கலங்கி, ப்ரக்ருதி தின்ற ஆத்மாவைக்காட்டி தாம்விரும்பியதை எல்லாம் அறிவிப்பதற்கு முன்னம் மங்களாசாஸனம் பண்ணுகிறார். இந்த மங்களாசாஸனமும் ''ஜயத்யதிபலோராம: லக்ஷ்மணச்ச மஹாபல:, ராஜாஜயதி ஸுக்ரீவோராகவேணாபிபாலித:[6]'' என்றதில்போல் ஸம்பந்திகளளவும் செல்கிறது.

---



# ஆர்த்திப்ரபந்தம்

## *தனியன்கள்*

தேன்பயிலுந் தாரான்[7] எதிராசன்சேவடிமேல்
தான்பரமபத்தி தலையெடுத்து—மாந்தர்க்கு
உணவாகஆர்த்தியுடன் ஒண்தமிழ்கள்செய்தான்
மணவாளமாமுனிவன் வந்து.

வம்பவிழ்தார்[8]வண்மை மணவாளமாமுனிகள்
அம்புவியில்கால்பொருந்தா ஆர்த்தியினால்—உம்பர்தொழும்
விண்ணுலகிற்செல்ல விரைந் தெதிராசன்பதங்கள்
நண்ணி யுரைத்தார் நமக்கு.

---

1. உபாயம் (அடையும் வழி பற்றி), 2. அடையத்தகுந்த விஷயம் பற்றி, 3. அடைய வேண்டும் லக்ஷ்யத்தை அடைவதில் ஆற்றாமை விஞ்சியிருப்பதைப் பேசுதல், 4. ஸ்ரீராமாயணம் ஆர, 6-16, 5. ஸ்ரீராமாயணம் ஆர, 1-12, 6. ஸ்ரீராமாயணம் ஸுந், 42-33 7. தேன் பயிலும் புஷ்பங்களால் ஆன மாலை, 8. அப்போதலர்ந்த செவ்வியுடைய பூக்களாலானமாலை தரித்தவன்.

வாழி யெதிராசன் வாழி யெதிராசன்
வாழியெதி ராசனென[1]வாழ்த்துவார்—வாழியென
வாழ்த்துவார்வாழியென வாழ்த்துவார் தாளிணையில்[2]
தாழ்த்துவார் விண்ணோர் தலை[3]. 1

இராமானு சாய நமவென்று சிந்தித்து
இராமானுசரோடு[4]இறைப்போழ்து — இராமானு
சிந்திப்பார்[5]தாளிணையில் சேர்ந்திருப்பார்தாளிணையை
வந்திப்பார் விண்ணோர்கள் வாழ்வு[6] 2

தந்தை நற் றாய்தாரம் தநயர் பெருஞ்செல்வம்
என்தனக்கு நீயே எதிராசா !—இந்த நிலைக்கு
ஏலாத இவ்வுடலை இன்றே அறுத்தருள
பாரதெதன்னோ ? பகர். 3

இந்தவுடற் சிறைவிட்டு எப்பொழுது யானேகி
அந்தமில் பேரின்பத்து ளாகுவேன் ?—அந்தோ !
இரங்காய் எதிராசா ! என்னை இனியுய்க்கை
பாரங்காண்[7]? உனக்கு உணர்ந்துபார். 4

தன்புதல்வன் கூடாமல் தான்புசிக்கும் போகத்தால்
இன்புறுமோ தந்தை எதிராசா !—உன்புதல்வன்
அன்றோயான் ? உரையாய் ஆதலால் உன்போகம்
நன்றோ ? எனையொழிந்த நாள் ! 5



வேம்புமுற்றக் கைப்பு மிகுவதுபோல் வெவ்வினையேன்[8]
தீம்புமுற்றும் தேகமுற்றிச் செல்லுங்கால்—ஆம்பரிசால்
ஏற்கவே சிந்தித்து[9]எதிராசா ! இவ்வுடலைத்
தீர்க்கவே யான வழி செய். 6

அன்னை குடி நீ ரருந்தி[10] முலை யுண்குழவி
தன்னுடைய நோயைத்தவிராளோ—என்னே
எனக்கா எதிராசா ! எல்லாம் நீசெய்தால்
உனக்கது தாழ்வோ ? உரை. 7

---

*1. வாழி எதிராசன் என மும்முறை பல்லாண்டு, பல்லாண்டு, பல்லாயிரத்தாண்டு என்னுமாப்போலே. 2. இப்படி வாழ்த்துவார்களை வாழி என்று வாழ்த்துவார்களுடைய திருவடிகளில், 3. இப்படி வணங்குமவர் விண்ணோர்க்குத் தலைவர்களாவார், 4. ராமானுஜாயநம: என்று சிந்தித்து இராத மனிதர்கள், 5. மேல்சொன்ன பாபிகளுடன் இறைப்போதும் இருத்தல் கூடாது என்றிருப்பவர், 6. நித்யஸூரிகளுக்கு நித்ய ஸம்பத்து 7. அவச்யம் செய்ய வேண்டுவது, 8. கொடிய வினையுடையேன், 9. ஸ்வரூபம் நிறம் பெறும்படிக்கு எற்ப முற்கோலிச் சிந்தனை செய்து. 10. குடிநீர் முதலான ஔஷதம்.*

தன்குழவி வான் கிணற்றைச் சார்ந்திருக்கக் கண்டிருந்தாள்
என்பதன்றோ அன்னைபழி யேற்கின்றாள்—நன்குணரில்
என்னாலே யென்னாச மேலும்[1] எதிராசா !
உன்னாலே யாமுறவை யோர். 8

கூபத்தில் வீழும் குழவி யுடன்குதித்துஅவ்
வாபத்தை நீக்கும்அந்த வன்னைபோல்—பாபத்தால்
யான்பிறப்பேனேலும் இனியெந்தை எதிராசன்
தான்பிறக்குமென்னை யுய்ப்பதா[2]. 9

பூமகள்கோன்[3]தென்னரங்கர் பூங்கு ழற்குப்பாதுகமாய்
தாம் மகிழும் செல்வச் சடகோபர்—தேமலர்த்தாட்கு
ஏய்ந்தினிய பாதுகமாம் எந்தை இராமாநுசனை
வாய்ந்தெனது நெஞ்சமே வாழ். 10

உன்னை யொழிய ஒருதெய்வம் மற்றறியா
மன்னு புகழ்சேர் வடுகநம்பி—தன்னிலையை
என்தனக்கு நீதந்து எதிராசா ! எந்நாளும்
உன்தனக்கே யாட்கொள் உகந்து. 11

தேசந் திகழும் திருவாய் மொழிப்பிள்ளை
மாசில் திருமலையாழ்வார் என்னை—நேசத்தால்
எப்படியே எண்ணி நின்பால் சேர்த்தார் எதிராசா !
அப்படியே நீ செய் தருள். 12



எதிராசன் வாழி எதிராசன் வாழி
எதிராசன் வாழியென் றென்றேத்தி—சதிராக
வாழ்வார்கள் தாளிணைக்கீழ் வாழ்வார்கள் பெற்றிடுவர்
ஆழ்வார்கள் தங்க ளருள். 13

அதிகாரமுண்டேல்[4] அரங்கர் இரங்காரோ ?
அதிகார மில்லாதார்க் கன்றோ—எதிராசா !
நீயிரங்க வேண்டுவது நீயும் அதிகாரிகளுக்
கேயிரங்கில் என்செய்வோம் யாம் ? 14

எம்பெரு மானார் திருவடிக ளேசரணம்
என்பதுவே நாவுரைக்கும் இத்தாலென் ?—அன்பவர்பால்
இப்போதளவும் யானென்றும் காண்கின்றிலேன்
எப்போதுண்டாவதினி ? 15

---

1. என் (பாபத்தாலேயே) என் நாசம் ஸம்பவிக்கிறது, என்னும் ; என்னாகு மேலும் என்றும் பாடம், 2. உய்விப்பதற்காக, 3. பூவிலே வாஸனை ஒரு வடிவு கொண்டாற்போலிருக்கும் பெரிய பிராட்டியாருடைய வலலபன், 4. ஞானம் அநுட்டானம் இவை பூர்த்தியாய் இருக்கப் பெருவதால் வரும் அதிகாரம்.

ஆகாதத்தென்றறிந்தும் பிறர்க்குரைத்தும்
ஆகாததே செய்வதனால்—மோகாந்த
னென்றுநினைத்து என்னை இகழேல் எதிராசா!
என்று உன்னடி சேர்வன் யான்? 16

பொல்லாங்கனைத்தும் பொதிந்துகொண்டு நன்மையிலொன்
றில்லா எனக்கும் எதிராசா!—நல்லார்கள்
நண்ணும் திருநாட்டை நான்தருவனென்று நீ
தண்ணென்றிருக்கிற[1] தென்தான்? 17

என்றுவிடிவது எனக்கு எந்தாய் எதிராசா?
ஒன்றுமறிகின்றிலேன் உரையாய்—குன்றாமல்
இப்படியே இந்தவுயிர்க்கென்றும் இருளேவிளைக்கும்
இப்பவமாம்[2] நீண்ட இரவு. 18

அல்லும்பகலும் யானுக்கை வழியுழன்று[3]
செல்லுமது உன் தேசுக்குத்[4] தீங்கன்றோ?—நல்லார்கள்
தந்தநயர் நீசர்க்காட்செய்யச் சகிப்பரோ?
எந்தையெதிராசா! இசை[5]. 19

போம் வழியைத்தருமென்னு மின்பமெல்லாம்
புசித்துவழிபோய்[6] அமுதவிரசையாற்றில்
நாம் மூழ்கி மலமற்று[7] தெளிவிசும்பை
நண்ணிநலந்திகழ் மேனிதன்னைப்பெற்று
தாம் அமரர் வந்தெதிர்கொண்டலங்கரித்துச்
சற்கரிப்ப[8] மாமணி மண்டபத்துச்சென்று
மாமலராள் கோன்[9] மடியில் வைத்துகக்கும்
வாழ்வு நமக்கெதிராசன் அருளும் வாழ்வே. 20



திருமலையாழ்வார் திருவாய்மொழிப்பிள்ளை சீரருளால்
தருமதி[10] கொண்டுஅவர்தம்மை உத்தாரகராக[11] எண்ணி
இருமனமே அவர்க்கா எதிராசர் எமைக்கடுகப்
பரமபதம் தன்னிலேற்றுவர் என்னபயம் நமக்கே? 21

---

1. விளம்பம் செய்வது; அநந்யகதியாய் அகிஞ்சனனாயிருக்கும் அடியேனுக்கு சீக்கிறமாக பரமபதம் அருளவேண்டும் என்று இங்கு ப்ரார்த்தனை. 2. இந்த ஸம்ஸாரம் நீண்ட இரவாயிற்று— எனக்கு எப்போது ராமாநுஜதிவாகர தர்சனம் பெற்று ஸுப்ரபாதமாக விடியும்? 3. சரீரத்துக்கு அடிமையாய் உழன்று, 4. உன்வைபவத்துக்கு 5. சொல்வாயாக, 6. போகும்வழி [திருவாய்மொழி 3-9-3] என்னும் அர்ச்சிராதிகதியின் இன்பத்தை அநுபவித்து 7. ப்ராக்ருதமான அழுக்கு விலகப்பெற்று, 8. ஸத்காரம் பெற்று, 9. ஸ்ரீய:பதியான ஸ்ரீவைகுண்டநாதன் 10. உபதேசிக்கும் ஞானம், 11. ஸம்ஸாரத்தினின்றும் கரையேற்றுபவராக.

தீதற்ற ஞானத்திருவாய்மொழிப்பிள்ளை சீரருளால்
ஏதத்தை[1] மாற்றும் எதிராசர்தம் அபிமானமென்னும்
போதத்தை[2] ஏறிப்பவமாம்[3] புணரி[4] தனைக்கடந்து
கோதற்ற மாதவன் பாதக்கரை[5]யைக் குறுகுவனே[6] 22

அடியார்கள் குழாங்கள் அழகோலக்க மிருக்க
ஆநந்த மயமான மாமணி மண்டபத்து
படியாதுமில்[7] படுக்கையா யிருக்கும் அநந்தன்
பணமணிகள் தம்மின்ஒளி மண்டலத் தினிடையில்
வடிவாரும் மாமலராள் வலவருகும் மற்றை
மண்மகளும் ஆய்மகளும் இடவருகும் இருக்க
நடுவாக வீற்றிருக்கும் நாரணனைக் கடுக
நான் அநுபவிக்கும்வகை நல்குஎன் எதிராசா! 23

இந்தவுடல் விட்டு இரவிமண்டலத்தூடேகி[8]
இவ்வண்டம் கழித்து[9] இடையிலாவரணமேழ்போய்
அந்தமில்பாழ்[10] கடந்து அழகார் விரசைதனில் குளித்து அங்கு
அமானவனலொ ஒளிகொண்ட சோதியும்[11]பெற்று அமரர்
வந்தெதிர்கொண்டலங்கரித்து வாழ்த்தி வழிநடத்த
வைகுந்தம்புக்கு மாமணிமண்டபத்துச்சென்று
நம் திருமாலடியார்கள் குழாங்களுடன் கூடும்
நாளெனக்குக் குறுகும்வகை நல்கு என் எதிராசா! 24

என்று நிரேதுகமாக என்னை அபிமானித்து
யானுமறிந்து உனக்கே யாயிருக்கும் வகை செய்தாய்
அன்றுமுதல் இன்றளவும் அநவரதம் பிழையே
அடுத்தடுத்துச் செய்வது அநுதவிப்பது இனிச்செய்யேன்
என்றுஉன்னைவந்திரப்பதாம் என்கொடுமை கண்டும்[12]
இகழாதே இரவுபகல் அடிமைகொண்டுபோந்தாய்
இன்று திருநாடும் எனக்கருள எண்ணுகின்றாய்
இனிக்கடுகச் செய்தருளவேண்டும் எதிராசா! 25

தென்னரங்கர்தமக்காமோ? தேவியர்கட்காமோ?
சேனையர்கோன் முதலான சூரியர்கட்காமோ?
மன்னியசீர்மாறன் அருள்மாரி தனக்காமோ?
மற்றுமுள்ள தேசிகர்கள் தங்களுக்குமாமோ?

---

1. காமம் முதலான தோஷம், 2. விஷ்ணுபோதம் என்று சொல்லப்படும் கப்பல், 3. ஸம்ஸாரம், 4. கடல், 5. திருவடிகளாகிற கடற்கரை, 6. கிட்டுவேன், 7. ஒப்பில்லாத, 8. தேரார் நிறைகதிரோன் மண்டலத்தைக் கீண்டுப்புக்கு—சிறியதிருமடல், 9. கடந்து 10. முடிவில் பெரும்பாழ்—திருவாய்மொழி 10-10-10; மூலப்ரக்ருதி, 11. திருவாய்மொழி 2-3-10 ப்ரக்ருதிஸம்பந்தமில்லாத ஒளிமயமான தேஹம் 12. என்று நிர்ஹேதுகமாய்...செய்தாயோ அன்று முதல் பிழையே செய்வதும், அநுதபித்து இனிச்செய்யேன் என்று உன்னை வேண்டுவது என்று மறுபடிமறுபடி செய்வதுமாகிற என் கொடுமையான சரித்திரம் கண்டும்.

என்னுடைய பிழைபொறுக்க யாவருக்குமுடியும்?
எதிராசா! உனக்கன்றி யானொருவர்க்காகேன்[1]
உன்னருளால் எனக்கு ருசிதன்னையும் உண்டாக்கி
ஒளிவிசும்பில் அடியேனை யொருப்படுத்து விரைந்தே. 26

இவ்வுலகில் இனியொன்றும் எண்ணாதேநெஞ்சே!
இரவுபகல் எதிராசர் எமக்கினிமேலருளும்
அவ்வுலகை அலர்மகள்கோன் அங்கிருக்கு மிருப்பை
அடியார்கள் குழாங்கள்தமை அவர்களநுபவத்தை
இவ்வுயிரும் அதுக்கிட்டுப்பிறந்து இழந்துகிடந்த
தென்னுமத்தை என்றும் அதுக்கிடைச்சுவராய்க் கிடக்கும்
வெவ்வினையால் வந்தவுடல்விடும் பொழுதை விட்டால்
விளையுமின்பம்தன்னை முற்றும் விடாமல் இருந்தெண்ணே. 27

பண்டுபலவாரியரும் பாருலகோருய்யப்
பரிவுடனே செய்தருளும் பல்கலைகள் தம்மை
கண்டதெல்லாம்[2] எழுதியவை கற்றிருந்தும் பிறர்க்குக்
காதலுடன் கற்பித்தும் காலத்தைக் கழித்தேன்[3]
புண்டரிகை கேள்வனுறை பொன்னுலகுதன்னில்
போகநினைவொன்றுமின்றிப் பொருந்தி இங்கேயிருந்தேன்
எண்திசையுமேத்தும் எதிராசனருளாலே
எழில்விசும்பையன்றி இப்போதென் மனமெண்ணாதே. 28

சாருவாகமதம் நீறுசெய்து[4] சமணச்செடிக்கனல் கொளுத்தியே[5]
சாக்கியக்கடலை வற்றுவித்து[6] மிகுசாங்கியக்கிரி முறித்திட[5]
மாறுசெய்திடு கணாதவாதியர்கள் வாய்தகர்த்து[8] அறமிகுத்துமேல்
வந்தபாசுபதர்சிந்தி ஓடும்வகை[9] வாதுசெய்த எதிராசனார்
கூறும் மாகுருமதத்தொடு[10] ஓங்கிய குமாரிலன் மதம்[11]வற்றின்மேல்
கொடியதர்க்கசரம் விட்டபின் குறுகி மாயவாதியரை வென்றிட[12]
மீறிவாதில்வரு பாற்கரன் மதவிலக்கடிக்கொடி எறிந்துபோய்[13]
மிக்கயாதவமதத்தை மாய்த்த[14]பெருவீரர் நாளும் மிகவாழியே. 29

---

1. நிகரின்றிநின்ற என் நீசதைக்கு நின்னருளின் கணன்றிப்புகல்ஒன்றுமில்லை [ரா-நூற்48] என்னும்படி தயைகவிந்துவான தேவரீராலன்றி வேறு யாராலும் என் பிழைகளைப் பொருக்கப் போகாது; தேவரீர்க்கொழிய அபராதமே வடிவெடுத்த நான் வேறு கோஷ்டிக்கு ஆளாகேன். 2. பூர்வாசார்யர்கள் அருளிச்செய்த பலக்ரந்தங்களை ஆதாரத்துடன் தேடிக் கண்டு, அவைகளெல்லாவற்றையும், 3. எழுதியும், ஆசார்யனடிபணிந்து கற்றும், சிஷ்யர்களுக்கு உபதேசித்தும் போது போக்கினேன்; தெரித்தெழுதி வாசித்தும் கேட்டும்...போக்கினேன் போது—நான்முகன் திரு-63. 4. சார்வாக மதத்தை சாம்பலாகும்படி பண்ணி, 5. ஜைன மதத்தை நெருப்பிலிட்டுக் கொளுத்தி. 6. புத்தமதமான கடலை உலர்த்தி, 7. ஸாங்க்ய மதமான பர்வதத்தைப் பொடித்து, 8. கணாத வாதியர்களை வாய் மூடுவித்து, 9. பாசுபதர்கள் சிதறி ஓடும்படி, 10. பிதற்றும் பெரிய ப்ரபாகரமதத்துடன், 11. குமரிலன் மதம்—பாட்டமதம், 12. மாயவாதிகளை சென்று ஜெயித்து, 13. பாஸ்கரமதத்தின் வேர்க்கொடிகளை வெட்டி எறிந்து, 14. யாதவ ப்ரகாச மதத்தை மாளப்பண்ணின,

சீராரும் எதிராசர் திருவடிகள் வாழி
திருவரையிற்சாத்திய செந்துவராடைவாழி
ஏராரும் செய்யவடி வெப்பொழுதும் வாழி
இலங்கிய முந்நூல் வாழி இணைத்தோள்கள் வாழி
சோராததுய்ய செய்யமுகச் சோதிவாழி
தூமுறுவல் வாழி துணைமலர்க்கண்கள் வாழி
ஈராறு திருநாமமணிந்த எழில்வாழி
இனிதிருப்போடெ[1]ழில் ஞானமுத்திரை வாழியே. 30

அறுசமயச் செடி[2]யதனை அடியறுத்தான் வாழியே
அடர்ந்துவரும் குதிர்ட்டிகளை[3] அறத்துறந்தான் வாழியே
செறுகலியைச் சிறிதுமறத்தீர்த்து விட்டான் வாழியே
தென்னரங்கர் செல்வம்முற்றும் திருத்திவைத்தான் வாழியே
மறையதனில் பொருளனைத்தும் வாய்மொழிந்தான் வாழியே
மாறனுரை செய்த தமிழ்மறை வளர்த்தோன் வாழியே
அறம்மிகு நற்பெரும்பூதூர் அவதரித்தான் வாழியே
அழகாரும் எதிராசர் அடியிணைகள் வாழியே. 31

சங்கர பாற்கார யாதவ பாட்ட ப்ரபாகரர் தங்கள்மதம்
சாய்வுற வாதியர்மாய்குவரென்று சதுமறை வாழ்ந்திடுநாள்
வெங்கலியிங்கினி வீறுநமக்கிலையென்று மிகத்தளர்நாள்
மேதினிநஞ்சுமையாறு மெனத்துயர்விட்டு விளங்கியநாள்
மங்கையராளிபராங்குச முன்னவர் வாழ்வுமுளைத்திடுநாள்
மன்னியதென்னரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடுநாள்
செங்கயல் வாவிகள்சூழ்வயல்நாளும் சிறந்தபெரும்பூதூர்ச்
சீமான் இளையாழ்வார் வந்தருளியநாள் திருவாதிரைநாளே 32

இன்னம் எத்தனைகாலம் இந்தவுடம்புடன் யானிருப்பேன்?
இன்னபொழுது உடம்புவிடும் இன்னபடியதுதான்
இன்னவிடத் தேயதுவும் என்னுமிவை எல்லாம்
எதிராசா! நீயறிதி யானிவையொன்றறியேன்
என்னை இனி இவ்வுடம்பை விடுவித்து உன்னருளால்
ஏராரும் வைகுந்தத்தேற்ற நினைவுண்டேல்
பின்னைவிரையாமல் மறந்திருக்கிறதென்? பேசாய்
பேதைமைதீர்த்து என்னை அடிமைகொண்ட பெருமானே! 33

---

1. *இனிதிருப்போடு—பத்மா ஸனஸ்தராய் எழுந்தருளி இருக்கும் இருப்புடன்கூட,* 2. *வைதிக மதத்துக்குப் புறம்பான சாக்யோலூக் யாக்ஷபாதக்ஷபணக் கபில பதஞ்சலிமதா: எனப்படும் ஷண்மதங்கள். "அறுசமயம் போனது"—ரா. நூற்-49; பார்த்தான் அறுசமயங்கள் பதைப்ப ரா—நூற்-52,* 3. *வேதத்துக்கு தவறான பொருள் சொல்லிக் குறும்பு செய்பவர்—நான்மறையும் நிற்கக் குறும்பு செய் நீசரும் மாண்டனர்—ரா. நூற்-99.*

முன்னைவினை பின்னைவினை பிராரத்தமென்று
மூன்றுவகையான வினைதொகையனைத்தும் யானே
என்னையடைந்தோர் தமக்குக் கழிப்பனெனுமரங்கர்[1]
எதிராசா! நீயிட்ட வழக்கன்றோ? சொல்லாய்
உன்னையல்ல தறியாத யான் இந்தவுடம்போடு
உழன்று வினைப்பயன் புசிக்கவேண்டுவதொன்றுண்டோ?
என்னுடைய இருவினையை இறைப்பொழுதில் மாற்றி
ஏராரும்[2]வைகுந்தத் தேற்றிவிடாய் நீயே. 34

அருளாலே அடியேனை அபிமானித்தருளி
அநவரதம் அடிமைகொள்ள நினைத்து நீயிருக்க
மருளாலே[3]புலன் போக[4]வாஞ்சை செயும்[5]என்தன்
வல்வினையை[6]மாற்றி உன்பால் மனம் வைக்கப்பண்ணாய்
தெருளாரும் கூரத்தாழ்வானும் அவர்செல்வத்
திருமகனார் தாமும் அருளிச்செய்த தீமைத்
திரளானதித்தனையும்[7] சேரவுள்ளவென்னைத்
திருத்தியுய்யக் கொள்ளும்வகை தேரும் எதிராசா.[8] 35

வாதனை[9]யி லூற்றமோ? மாளாத வல்வினையோ?
ஏதென்ற றியேன் எதிராசா!—தீதாகும்
ஐம்புலனி லாசை அடியேன் மனந்தன்னை
வன்புடனே[10] தானடரும் வந்து[11]. 36



இன்றளவு மில்லா அதிகாரம் மேலும்எனக்கு
என்று எதாம்[12]சொல்லாய் எதிராசா! குன்றா
வினைத்தொடரை[13] வெட்டிட்டு மேலைவை குந்தத்து
எனைக்கடுக ஏற்றாத தென்? 37

அஞ்சில் அறியாதார் ஐம்பதிலும் தாமறியார்
என்சொல் எனக்கோ? எதிராசா!—நெஞ்சம்
உனதா ளொழிந்தவற்றையே[14]உகக்க இன்றும்
அநுதாப மற்றிருக்கை யால். 38

---

1. ஸர்வ தர்மான்......மோக்ஷயிஷ்யாமி, மாசுச: என்று கீதையில் சரமச்லோகமாக மெய்ம்மைப் பெருவார்த்தை பணித்த செம்மையுடைய திருவரங்கர், 2. அழகு நிறைந்ததான, 3. அஜ்ஞானத்தாலே, 4. இந்திரியங்களால்வரும் ஸுகங்கள், 5. ஆசைப்படும், 6. கொடிய பாபங்கள், 7. கூரத்தாழ்வானும் பட்டரும் நைச்யத்தால் தம்மிடமுள்ளதாகச் சொல்லிக்கொண்ட தீமைகள், 8. செயல் நன்றாகத் திருத்தி (கண்ணி-10) என்றபடி திருத்தி உய்யக் கொண்டருளும் வழியைச் சிந்தித்தருளுமவரான எதிராசரே! 9. வாஸனை, 10. வலிவுடன், 11. தானே வந்து விஷயங்களில் மூட்டுவதற்கு மேலிடும், 12. இப்போதில்லாதது எப்போது உண்டாகப் போகிறது. அதிகாரம்—14ம் பாசுரம் காண்க, 13. குறையாத பாபப்பிணைப்பை, 14. உன் தாள்தவிர மற்றவைகளை—ப்ராப்த விஷயத்திலல்லாமல் மற்ற விஷயங்களிலே.

வேம்பு கறியாக விரும்பினுர் கைத்ததென்று
தாம்புகடாதே[1]புசிக்கும் தன்மைபோல்—தீம்பனி வன்
என்று நினேத்து என்னேஇகழார் எதிராசர்
அன்றறிந்தங்கீ கரிக்கையால்[2] 39

அவத்தே[3]பொழுதை அடியேன் கழித்து இப்
பவத்தே[4]இருக்குமது பண்போ ?—திவத்தே[5]யான்
சேரும் வகைஅருளாய் சீரெதிராசா !
போருமினி இவ்வுடம்மைப் போக்கு. 40

எனேப்போல் பிழை செய்வார் இவ்வுலகி லுண்டோ ?
உனேப்போல் பொறுக்கவல்லார் உண்டோ ?—அனேத்துலகும்
வாழப்பிறந்த[6]எதிராச மாமுனிவா !
ஏழைக் கிரங்கா யினி. 41

ஐம்புலன்கள் மேலிட்டரும் போழுது[7]அடியேன்
உன்பதங்கள்தம்மை நினேந்தோலபிட்டால்[8]பின்பவைதாம்
என்னே யடராமல் இரங்காய் எதிராசா !
உன்னேயல்லா தார் எனக் குண்டோ ?[9] 42

இந்த வுலகிற் பொருந்தாமை ஏதுமில்லே
அந்த வுலகிற்போக ஆசையில்லே[10]இந்தநமக்கு
எப்படியே தான் தருவர் ! எந்தை எதிராசர்
ஒப்பில் திருநாடு கந்து ? 43

மாகாந்த[11]நாரணனுர் வைகும்[12]வகையறிந்தோர்க்கு
ஏகாந்த மில்லே இருளில்லே[13]—மோகாந்தர்[14]
இவ்விடமேகாந்தமிருளென்று பயமற்றிருந்து
செய்வார்கள் தாம் பாவத் திறம்[15] 44

நாராயணன் திருமால் நாரம்நாம் என்னுமுறவு[16]
ஆராயில் நெஞ்சே ! அநாதி யன்றோ ?—சீராரும்
ஆசா ரியனுலே யன்றோ நா முய்ந்ததென்று
கூசாமல் எப்பொழுதும் கூறு[17]. 45

---

1. வெறுத்து ஒதுக்காமல், 2. அன்று அங்கீகரித்து விட்டமையால் எதிராசர் இன்று இகழ மாட்டார், 3. வீணுக, 4. ஸம்ஸாரத்தில், 5. பரம பதத்திலே, 6. வாழ்விக்கப் பிறந்த, 7. 36ம் பாசுரம் காண்க, 8. எம்பெருமானுர் திருவடிகளே சரணம் என்று நெஞ்சில் எண்ணி வாயால் கூப்பிட்டால், 9. உன்னே ஒழிய வேறு ரக்ஷகரில்லாமையால் நீ இரங்க வேண்டும், 10. ஸம்ஸாரத்தில் வெறுப்பு—அடிக்கொதிப்பு இல்லே; ப்ராப்யத்தில் ருசி யில்லே; இப்படிப்பட்டவனுக்கு உயர்ந்தபலனே எதிராசர் எப்படி ஸாதிப்பர் ? 11. லக்ஷ்மீ காந்தன், 12. உடன் மிசையுயிரெனக்கரந்தெங்கும் பரந்துளன் (திருவாய்-1—1—7) என்கிறதில் சொன்ன வ்யாப்தி, 13. எங்குமே தனிமை, இருட்டு இவை இல்லே பரஞ்சோதியான பகவான் எங்குமுளனுகையாலே, 14. ஞானமின்மையால் குருடர், 15. பாவத்திரள்கள். 16. நாம் நாரம் (நித்யமாயுள்ள ஆத்மவஸ்துக்கள்); திருமால் இந்த ஜீவாத்மாக்களேயுடைய (இவைகளுக்கு) ஸ்வாமியான நாராயணன் ; இந்த உறவு அநாதி, 17. என்னுவாயாக,

திருவாய் மொழிப்பிள்ளை தீவினையோர் தம்மை
குருவாகி வந்து உய்யக் கொண்டு—பொருவில்
மதி[1]தா னளித்தருளும் வாழ்வன்றோ நெஞ்சே!
எதிராசர்க்கு ஆளானோம் யாம். 46

இராமாநுசாயநமவென்று இரவும் பகலும் சிந்தித்து
இராமாநுசர்கள்[2]இருப்பிடந்தன்னில் இறைப்பொழுதும்
இராமாநுசர்[3]அவர்க்கு எல்லாவடிமையும் செய்ய வெண்ணி
இராமாநுசரை[4] மாநுசரா[5]வென்று கொல்? எண்ணுவதே! 47

எண்ணாது என்னெஞ்சம் இசையாது என்நா இறைஞ்சாது சென்னி
கண்ணனவை ஒன்றும் காணலுறா கலியார் நலிய
வொண்ணாதவண்ணம் உலகளித்தோன்[6]எதிராசனடி
நண்ணாதவரை அரங்கேசர் செய்த நலம் நமக்கே. 48

நந்தாநரகத்தழுந்தாமை வேண்டில் நானிலத்தீர்!
எந்தாதையான எதிராசனை நண்ணும் என்றும் அவன்
அந்தாதி தன்னையநு ஸந்தியும் அவன் தொண்டருடன்[7]
சிந்தாகுலம் கெட[8]ச் சேர்ந்திரும் முத்திபின்சித்திக்குமே[9]. 49



அவத்தேயருமந்த[10]காலத்தைப்போக்கி அறிவின்மையால் இப்
பவத்தே உழல்கின்ற பாவியர்காள்! பல காலம் நின்று
தவத்தே முயல்பவர் தங்கட்கும் எய்தவொண்ணாத அந்தத்
திவத்தே உம்மை வைக்கும் சிந்தியும் நீர் எதிராசரென்றே.[11] 50

---

1. ஒப்பில்லாத ஞானம்; இது ஆசார்யன் உபதேசிக்கும் திருமந்திரத்தால் வருவது; திருவாய்மொழிப் பிள்ளை அருளால் தாம் எதிராசர்க்கு ஆளானதாக "ஸ்ரீமந்யதீந்த்ர தவதிவ்ய பதாப்ஜஸேவாம் ஸ்ரீசைலநாதகருணா பரிணாமதத்தாம்" என்று எதிராஜவிம்சதி(19)யிலும் அருளிச்செய்துள்ளது காண்க. 2. நையும் மநம் உன் குணங்களையுன்னி; என்நா இருந்து எம்மையன் இராமாநுசன் என்றழைக்கும்" (இரா. நூற்—102) என்றபடி இராத மனிதர்கள், 3. முன்சொன்ன பாசுரப்படி நடப்பவர்கள் இருக்குமிடத்தில் இருக்க ஸஹியாதவர்கள், 4. "இராமாநுசன் திருநாமம் நம்ப வல்லார்திறத்தை மறவாதவர்கள் யவர்—அவர்க்கே எல்லாவிடத்திலும் என்றும் எப்போதிலும் எத்தொழும்பும் சொல்லாமல் மனத்தால் கருமத்தால் செய்வன் சோர்வின்றியே (இரா. நூற்-80) என்ற நிலையில் இருக்க நிச்சயித்து, அப்படி இராதவர்களை, 5. மனிதர் என்று எப்படி எண்ணுவது? இவர்கள் ஞானமில்லாத மிருகங்களுக்கு ஒப்பானவர்கள், 6. கலி நலியாவண்ணம் உலகத்தை வாழ்வித்த எதிராசர் திருவடிகளை ஆச்ரயிக்காதவரை என் நெஞ்சம் எண்ணாது; காணலுறா; இந்த நிலை அரங்கன் நமக்குச் செய்த நன்மை, 7. உன் தொண்டர்கட்கே அன்புற்றிருக்கும் (இரா. நூற்-107) என்கிறபடி அவர்களுடன், 8. மனதில் இழவெல்லாம் போகும்படி, 9. இப்படிப்பட்ட சரித்திரமுடையோர்களுக்கு மோக்ஷம் நிச்சயமாகக் கிட்டும், 10. விலை மதிக்க முடியாத உயர்த்தியையுடைய, 11. நீர் எதிராசரென்றே சிந்தியும்.... திவத்தே உம்மை வைக்கும்—நீர் செய்வது அல்பம்; அதன்பலனோ மிகவுயர்ந்தது.

